ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸுதர்சனர் பதில்



( ஆறுவது சதகம் )

## மதங்கள், சாஸ்திரங்கள், இலக்கியங்களில் வாசகர்களின் 100 ஐயவினாக்களுக்கு ஆசிரியரின் விளக்கங்கள்

[இந்த சதகத்தில் வெளிவந்த கேள்வி பதில்கள்
(சென்னை-5) கீதாசார்யன் பத்திரிகையில் வெளிவந்தவை.]

ஆசிரியர் :—

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L.
( ஸுதர்சனர் ) அட்வகேட்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.
டிரஸ்டிகள்:-
S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L., அட்வகேட்.
S. ராம அய்யங்கார், B.Sc.B.L., அட்வகேட்.

[ 11—8—1983 ]

விலை ரூ. 2.00. தபால் 0.40.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

**இந்நூலில் விமர்சிக்கப்படும் பத்திரிகைகளின் பெயரும், அதற்கான கேள்விகளின் எண்ணும் கீழே தரப்படுகின்றன.**

1. தினமணிகதிர் — 69
2. குமுதம் — 70
3. துக்ளக் — 70
4. கல்கி — 73, 74, 76
5. இதயம் — 75, 88
6. ஞானபூமி — 77 to 80, 87, 95 to 99, அனுபந்தம்

## முக்கியமான அறிவிப்பு

இந்த சதகத்தில் 98-வது கேள்வியின் பதிலில் நாம் "பரமவைஷ்ணவராயிருந்த ஆதிசங்கரருக்கு துரோகிகளாய் இக்கால அத்வைதிகள் மாறுவதற்கு அப்பயதீக்ஷிதரே வழிவகுத்தவர்" என்று காரணங்காட்டியெழுதியதை— இடத்தைக் காட்டாமல் கீர்த்திமூர்த்தியான ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியிடம் பேட்டியில் அரைகுறையாகக் கூறி வற்புறுத்தி அவரைக்கொண்டு கண்டிக்கச்செய்தார். 'ஞானபூமி' மணியன். ஞானபூமி ஜூலை இதழில் அதை வெளியிட்டார். அதுபற்றிய நமது விளக்கக் கட்டுரை [அப்பயதீக்ஷிதர்பற்றி அண்ணா ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகள்] ருத்ரோத்காரி ஆடி-மீ ஸுதர்சனத்தில் அண்ணா ஸ்வாமி நினைவு மலரில் நம்மால் வெளியிடப்பெற்றது. அது இந்த சதகத்தின் அனுபந்தமாக அளிக்கப்பெற்றுள்ளது. இந்நூலில் 87-வது கேள்வியின் பதிலில் எடுக்கப்பட்டதும், ஞானபூமியில் வெளிவந்ததுமான வானமாமலை ஜீயர் ஸ்வாமியின் பேட்டியிலும் பல விஷயங்கள் திரித்து வெளியிடப்பெற்றுள்ளன என்று ஜீயர் ஸ்வாமி அருளியதும், இவ்வனுபந்தத்தில் குறிக்கப்பெற்றுள்ளது. அண்ணா ஸ்வாமி நினைவுமலர் வேண்டுவோர் ரூ. 1-50 அனுப்பித் தபால்மூலம் அதனைப் பெறலாம்.

—ஸுதர்சனம் ஆசிரியர்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில்—ஆறுவது சதகம்

— ❋ —

*1. ப்ராப்யம் என்றால் என்ன?*

அடையத்தக்க ப₄லன் (பயன்) ப்ராப்யம் எனப்படுகிறது. இதை உபேயம், ஸாத்₄யம் என்றும் கூறுவதுண்டு. ப்₃ரஹ்மம் எனப்படும் பரம்பொருளே அடையத்தக்கதாகையால் அதுவே ப்ராப்யம் முதலான பத₃ங்களால் சொல்லப்படுகிறது.

*2. ப்ராப்தா என்றால் என்ன?*

அடைபவன் ப்ராப்தா எனப்படுகிறான். ப்ராப்யமான ப்₃ரஹ்மத்தை முக்தி நிலையில் அடைபவனான ஜீவன் ப்ராப்தா எனப்படுகிறான்.

*3. ப₄லம் என்பது என்ன?*

ஜீவன் ப்₃ரஹ்மத்தை முக்தி நிலையில் அடைந்து, பெறும் பயனாகிற கைங்கர்யம் ப₄லம் எனப்படுகிறது. இதையே புருஷார்த்த₂ம் என்றும், பேறு என்றும் கூறுவதுண்டு.

*4. உபாயம் என்பது என்ன?*

முற்கூறிய ப₄லத்தைப் பெறுவதற்கு வழி எதுவோ அதுவே உபாயம் எனப்படும். இதை ஸாத₄னம், ப்ராபகம் என்றும் கூறுவதுண்டு. ப்ராப்யமான பரம்பொருளை அடைவதற்கு உபாயமும் அப்பரம்பொருளே என்பது எல்லா ஶாஸ்த்ரங்களின் தேர்ந்த முடிவு. எம்பெருமானுடைய முக மலர்த்திக்கேயான கைங்கர்யத்தை முக்திநிலையில் பெறவிரும்புகிறவர்கள் தமது முயற்சி எதையும் அவனைப் பெற உபாயமாக நினையாமல், எம்பெருமானையே உபாயமாக உறுதி பூண்டிருக்கவேண்டும். இவ்வளவு பக்குவமில்லாமல், மோக்ஷமடைவது தம்முடைய ஆனந்த₃த்திற்குமாகும் என்று நினைப்பவர்களுக்காக எம்பெருமான் கர்மயோக₃ம், ஜ்ஞானயோக₃ம், ப₄க்தியோக₃ம், திருநாமஸங்கீர்த்தனம், தி₃வ்யதே₃ஶவாஸம் முதலான உபாயங்களை ஶாஸ்த்ரங்களில் விதி₄த்திருக்கிறான். ஜீவன் ஸாதி₄க்கவேண்டிய உபாயங்களாகையாலே இவை ஸாத்₄யோபாயம் எனப்படும். இவற்றுக்கு எம்பெருமானுடைய

ஸங்கல்பத்தினாலேயே உபாயத்வம் ஏற்பட்டிருக்கிறபடியால் இவை செயற்கையான உபாயங்கள்; இயற்கையான உபாயங்களன்று. எப்போதும் ஸித்₃த₄மாயிருக்கும் உபாயமாகையால் எம்பெருமான் ஸித்₃தோ₄பாயம் எனப்படுகிறான். இவனே இயற்கையான உபாயமாவான்.

*5. ப்ராப்திவிரோதி₄ என்றால் என்ன?*

முன்கூறிய ப₂லனை அடைவதற்குத் தடையாயிருப்பது ப்ராப்திவிரோதி₄ எனப்படும். அநாதி₃காலமாக ஜீவனுக்குத் தொடர்ந்து வரும் *ஶரீரஸம்ப₃ந்த₄ம்*, அதனால் விளையும் அஜ்ஞானம் (தன் ஸ்வரூபத்தையும் பரஸ்வரூபத்தையும் அறியாமை), அதனால் உண்டாகும் புண்ய பாபகர்மங்கள், அதனால் விளையும் வாஸனை, அதனால் விளையும் *ஶப்₃த₃*ா*தி₃* விஷயருசி ஆகியவை ப்ராப்திவிரோதி₄கள் எனப்படுகின்றன.

*6. அர்த்த₂பஞ்சகம் என்றால் என்ன?*

முன் ஐந்து கேள்விகளிலும் விவரிக்கப்பட்ட ப்ராப்யம், ப்ராப்தா, ப்ராப்திப₂லம், ப்ராப்த்யுபாயம், ப்ராப்திவிரோதி₄ என்னும் இந்த ஐந்து அர்த்த₂ங்களும் அர்த்த₂பஞ்சகம் எனப்படும். அறிவுள்ள ஒவ்வொரு மனிதனும் இவற்றை அறிய வேண்டுமாகையாலே இவற்றையே ஸகல *ஶாஸ்த்ரங்களும்* விளக்குகின்றன.

*7. 'ப்ராப்தாவும் அவனே' [ஸ்ரீவசனபூ₄ஷணம் 70] என்று பிள்ளைலோகாசார்யர் 'எம்பெருமானே ப்ராப்தா' என்று அருளிச்செய்திருக்கும்போது அர்த்த₂பஞ்சகத்தில் ஜீவனை ப்ராப்தா என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?*

முக்தி நிலையில் எம்பெருமான் ஜீவனை அடைகிறான். ஜீவனும் எம்பெருமானை அடைகிறான். ஆகையால் இருவரையுமே ப்ராப்தா என்று சொல்ல இடமிருக்கிறது. அதையிட்டு *ஶாஸ்த்ரங்கள்* ஜீவனை ப்ராப்தா என்று பலவிடங்களில் கூறுகின்றன. அதனாலேயே அர்த்த₂பஞ்சகத்திலும் ஜீவன் ப்ராப்தா எனப்பட்டான். ஆயினும் உண்மையை ஆராய்ந்தால், அநாதி₃ காலமாக இந்த ஜீவனைப் பெறவிரும்பியிருப்பவன் எம்

பெருமானே. அதற்காக உலகை ஸ்ருஷ்டிப்பது, அதனுள் அவதரிப்பது முதலான அருஞ்செயல்களை இடைவிடாமல் செய்கிறான். இந்த ஜீவனோ 'யாதானும் பற்றி நீங்கும் விரதம்' [திருவிருத்தம் 95] என்கிறபடியே அநாதி₃காலமாக எம்பெருமானைத் தவிர்ந்த வேறு ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றிக்கொண்டு, அவனைவிட்டு நீங்குவதையே விரதமாகக் கொண்டிருக்கிறான். எம்பெருமானுடைய முயற்சிகள் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு ஜீவன் விஷயமாகப் ப₂லித்த பின்பே ஜீவனுக்கு எம்பெருமானை அடையவேண்டும் என்னும் ஆசை உண்டாகிறது. அந்த ஆசையையும் படிப்படியாக வளரச் செய்து, ஜீவன் தன்னை அடையும்படியாகச் செய்பவன் எம்பெருமானே. இதையெல்லாம் பார்க்கும்போது, 'ஈஶ்வரலாப₄ம் சேதனனுக்கு' என்று சொல்வதைக் காட்டிலும், 'சேதனலாப₄ம் ஈஶ்வரனுக்கு' என்று சொல்லுவதிலேயே பொருத்தம் உள்ளது என்று விளங்குகிறது. இதைத் திருவுள்ளம் பற்றியே பிள்ளை உலகாசிரியர் 'ப்ராப்தாவும் அவனே' என்று அருளிச்செய்தார்.

*8. தத்வம் என்றால் என்ன? அது எத்தனை வகைப்படும்?*

தத்வம் என்றால் 'உண்மைப் பொருள்' என்று பொருள் படும். நமது விஶிஷ்டாத்₃வைத மதத்தில் அதை சித், அசித், ஈஶ்வரன் என்று மூன்று வகையாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அறிவுள்ளவர்களான ஜீவர்கள் அனைவரும் சித் (சேதனர்) என்னும் வகையைச் சேர்ந்தவர்கள். அறிவில்லாத பொருள்கள் அனைத்தும் அசித் (அசேதனம்) என்னும் வகையைச் சேர்ந்தவை. இவை இரண்டையும் நியமிக்கும் ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே ஈஶ்வரனாவான். இவன் அறிவுள்ளவர்களில் தலைசிறந்தவனாகையாலே பரம சேதனனுமாவான். நாராயணன், வாஸுதே₃வன், விஷ்ணு, ஹரி, அநந்தன் முதலான தனிப் பெரும் பெயர்களுடைய இவன் ஒருவனே பரப்₃ரஹ்மமாவான். முற்கூறிய சேதநாசேதநங்களைக் குறிக்கும் எல்லாச் சொற்களுமே அவற்றுக்கு அந்தர்யாமியான இவன் வரையிலும் சொல்லக்கூடிய வல்லமையுடையவை. "வசஸாம் வாச்யமுத்தமம்"

[ஜிதந்தே] [சொற்களுக்கு மேலான பொருளாயிருப்பவன்] "சொல்லினுல் தொடர்ச்சி நீ" [திருச்சந்த விருத்தம்] என்னும் ப்ரமாணங்கள் இதையே காட்டுகின்றன. இந்த ஈச்வரன் எல்லையற்ற கல்யாண குணங்களையும், கணக்கும் எல்லையு மில்லாத உபய விபூதியையும் உடையவன். சித், அசித் என்னும் வகைகளில் ஒவ்வொன்றிலும் கணக்கற்ற பொருள் கள் அடங்கியிருக்கையால் தத்வங்கள் (உண்மைப் பொருள் கள்) கணக்கற்றவை என்றும் சொல்லலாம். இப்படி விசிஷ்டமான (சேதநாசேதநங்கள் அனைத்தோடும் கூடிய) ப்ரஹ்மம் ஒன்றே என்று ஒப்புக் கொள்கையால் நமது மதம் விசிஷ்டாத்வைதம் எனப்படுகிறது.

*9. ஹிதம் என்ருல் என்ன?*

சேதநனுக்கு எது நன்மையை அளிப்பதோ அது ஹித மாகும். இதுவே உபாயம் என்றும், ப்ராபகம் என்றும், ஸாதனம் என்றும் கூறப்படுகிறது. நான்காவது கேள்வியின் பதிலைக் காண்க.

*10. தத்வ ஹித புருஷார்த்தங்கள் என்று மூன்று வகை யாகப் பிரிப்பதற்கும், அர்த்தபஞ்சகம் என்று ஐந்து வகை யாகப் பிரிப்பதற்கும் தொடர்பு உண்டா?*

தத்வ ஹித புருஷார்த்தங்களில் அர்த்த பஞ்சகமும் அடங்கியிருக்கின்றது. ஹிதம் என்பதே உபாயம். ப்ராப்ய மான ப்ரஹ்மமும், ப்ராப்தாவான ஜீவனும் தத்வத்தில் அடங்கிவிடுகிருர்கள். புருஷார்த்தமானது இஷ்டப்ராப்தி என்றும் அநிஷ்ட நிவ்ருத்தி என்றும் இரண்டு வகைப்படும். மூன்ருவது கேள்வியில் சொல்லப்பட்ட பலமாகிற கைங்கர்யமே இஷ்டம் (விரும்பத்தக்கது) எனப்படும். ஐந்தாவது கேள்வி யில் விவரிக்கப்பட்ட விரோதியே அநிஷ்டம் (இஷ்டத் திற்குத் தடையாயிருப்பது) எனப்படும். இவ்வகையில் புரு ஷார்த்தத்தில் பலஸ்வரூபமும், விரோதிஸ்வரூபமும் அடங்கி யிருக்கின்றன. இவ்வண்ணமாக அர்த்தபஞ்சகமும் தத்வ ஹித புருஷார்த்தங்களில் அடங்கியுள்ளது.

*11. சேதனர்கள் எத்தனை வகைப்படுவர்?*

ப3த்3த4ர், முக்தர், நித்யர் என்று மூவகைப்படுவர். ஸம்ஸார மண்ட3லத்தில் கட்டுண்டு கிடக்கும் நம்மைப் போன்றவர்கள் ப3த்3த4ர் என்னும் வகையைச் சேர்ந்தவர்கள். அநாதி3 காலமாக ஸம்ஸாரத்தில் கட்டுண்டு கிடந்து, எம்பெருமான் அருளாலே ஒரு காலத்தில் முக்தியடைந்து (ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை அடைந்து) பரமபத3மடைந்தவர்கள் முக்தர் என்னும் வகையைச் சேர்ந்தவர்கள். என்றுமே ஸம்ஸாரப3ந்த4ம் இல்லாதவர்களாய், எம்பெருமானுக்குப் பரமபத3த்திலிருந்து தொண்டு புரியும் அநந்தன் (ஆதி3 ஶேஷன்), க3ருட3ன், விஷ்வக்ஸேனர் முதலானவர்கள் நித்யர் என்னும் வகையைச் சேர்ந்தவர்கள். ப3த்3த4ர், முக்தர், நித்யர் என்னும் மூன்று வகையிலும் கணக்கற்றவர்கள் இருக்கிறார்கள்.

*12. அசேதனங்கள் எத்தனை வகைப்படும்?*

அசேதனங்கள் ஶுத்3த4ஸத்வம், மிஶ்ரஸத்வமான பிரக்ருதி ப்ராக்ருதங்கள், ஸத்வஶூன்யமாகிற காலம் என்று மூன்று வகைப்படும். ஶுத்3த4ஸத்வம் என்றும், நித்ய விபூ4தித்3ரவ்யம் என்றும் சொல்லப்படுவது—பரமபத3த்தில் திருமாமணி மண்ட3பம், கொடியணி நெடுமதிள்கள், கோ3புரங்கள், உத்3யான வனங்கள் முதலானவையாகப் பரிணமித்து நிற்கும் அசேதன த்3ரவ்யம். இது தானே பிரகாஶிக்கும் சோதிமயமான அப்ராக்ருத த்3ரவ்யமாகும். ஸம்ஸாரமண்ட3லத்திலுள்ள எல்லா அசேதனப்பொருள்களுக்கும் மூலமான மூலப்ரக்ருதியும், அதிலிருந்து உண்டான கணக்கற்ற ப்ராக்ருதப்பொருள்களும் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களை உடையவையாகையாலே மிஶ்ரஸத்வம் (ரஜஸ்தமஸ்ஸுக்களோடு கலந்த ஸத்வ கு3ணம் உடையன) எனப்படுகின்றன. இந்த முக்குணங்களும் இல்லாததும், வருஷம், மாஸம், நாள், நாழிகை, விநாடி முதலான பகுதிகளையுடையதுமான காலம் மூன்றாவது வகையான அசேதனப்பொருள். ரஜஸ் தமஸ்ஸுக்கள் இல்லாமல் ஸத்வகுணம் ஒன்றையே உடையதாகையால் நித்யவிபூ4தித்3ரவ்யம் ஶுத்3த4ஸத்வம் என்றும், ரஜஸ் தமஸ்ஸுக்களோடு கலந்த ஸத்வகு3ணத்தை உடையதாகை

யால் ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் மிஶ்ரஸத்வம் என்றும், (ரஜஸ் தமஸ்ஸுக்களோடு) ஸத்வகு₃ணம் அடியோடு இல்லாதிருப்ப தால் காலம் ஸத்வஶூந்யம் என்றும் சொல்லப்படுகின்றன. காலத்தில் முக்குணங்களுமே இல்லையாகையால் 'த்ரிகு₃ண ஶூந்யம்' என்றும் அதைச் சொல்லலாம்.

*13. ஆகாரத்ரயம் என்றால் என்ன?*

ஸ்ரீமந்நாராயணன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருக்கை யாகிற அநந்யார்ஹஶேஷத்வமும், எம்பெருமான் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருக்கையாகிற அநந்யஶரணத்வமும், எம்பெருமான் ஒருவனையே அநுப₄விக்கத்தக்க பொருளாக (அதாவது புருஷார்த்த₂மாக)க் கொண்டிருக்கையாகிற அநந்ய போ₄க்₃யத்வமும் ஆகாரத்ரயம் எனப்படும். இவை மூன்றும் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஸ்வரூபமாகும். (ஸ்வரூபத்தை நிரு பித்துத் தரும் தன்மைகளாகும்).

*14. ஜட₃ம் என்பது என்ன?*

வேறொன்றின் உதவியில்லாமல் தன்னைத்தானே காட்டாத பொருள் ஜட₃ம் எனப்படும். அதாவது பிறிதொன்றாலேயே பிரகாஶிப்பது ஜட₃மாகும். ப்ரக்ருதி ப்ராக்ருதங்களும், கால மும் ஜட₃த்₃ரவ்யங்களாகும்.

*15. ஜட₃மல்லாதவை (அஜட₃ம்) என்பது என்ன? அவை எத்தனை வகைப்படும்?*

பிறிதொன்றின் உதவியில்லாமல் தானே பிரகாஶிக்கும் த்₃ரவ்யம் அஜட₃ம் எனப்படும். (1) ஈஶ்வரன், (2) ஜீவன், (3) த₄ர்மபூ₄தஜ்ஞானம், (4) நித்யவிபூ₄தித்₃ரவ்யம் என்னும் நாலும் அஜட₃மாகும். இவற்றில் ஜீவனும், ஈஶ்வரனும் தமக்குத் தாமே பிரகாஶிக்கக் கூடியவையாகையால் 'ப்ரத்யக்' என்னும் வகையைச் சேர்ந்தவர்கள். த₄ர்ம பூ₄தஜ்ஞானமும், நித்ய விபூ₄தியும் தமக்குப் பிரகாஶியாமல், ஜீவனுக்கோ ஈஶ்வரனுக்கோ தாமே பிரகாஶிப்பவையாகையால் 'பராக்' என்னும் வகையைச் சேர்ந்தவை.

*16. த₄ர்மபூ₄தஜ்ஞானம் என்றால் என்ன?*

"நான் அறிகிறேன், என்னுடைய அறிவு" என்னும் உலக வழக்குகளைக் காணும்போது அறிவுமயமான ஜீவர்களாகிற நமக்கு கு₃ணமாக (த₄ர்மமாக) ஓர் அறிவு இருக்கிறது என்று விளங்குகிறது. "*நஹி விஜ்ஞாது: விஜ்ஞாதே: விபரிலோபோ வித்₃யதே*" [ப்₃ருஹதா₃ரண்யகம் 6-3-30] [அறிபவனை ஜீவனுடைய அறிவுக்கு அழிவு இல்லையன்றோ] என்னும் உபநிஷத்₃ வாக்யம் 'இவ்வறிவு அழியாமல் என்றும் இருப்பது' என்றும் காட்டுகிறது. இவற்றிலிருந்து விளக்கு, ஸூர்யன் முதலானவற்றுக்கு ஒளிபோலே ஜீவனுக்கு இவ்வறிவு அமைந்திருக்கிறது என விளங்குகிறது. இதுவே த₄ர்மபூ₄தஜ்ஞானம் எனப்படும். ப₃த்₃த₄ ஜீவர்களுக்கு இவ்வுலகில் (ஸம்ஸார மண்ட₃லத்தில்) இருக்கும் வரையில் அவர்களது கர்மத்தைப் பொட்டி சுருக்கத்தையும் விரிவையும் அடைகிறது இவ்வறிவு. "*ஸ ச ஆநந்த்யாய கல்பதே*" [ஶ்வேதாஶ்வதரம் 5-9] அந்த ஜீவன் (அறிவினால்) எல்லையற்றவனாகிறான் என்னும் உபநிஷத்₃ வாக்யம் இவ்வறிவு ஜீவனுக்கு முக்திநிலையில் எங்கும் பரவி விடுகிறது என்று காட்டிற்று. ஈஶ்வரனுடைய த₄ர்மபூ₄த ஜ்ஞானம் அவனது ஸ்வரூபத்தைப்போலவே, என்றும் எங்கும் பரவியிருக்கிறது.

*17. பதா₃ர்த்த₂த்₃வயம் என்றால் என்ன?*

உலகில் உள்ள எல்லா வஸ்துக்களும் (பதா₃ர்த்த₂ங்களும்) ப்ரமாணம், ப்ரமேயம் என்னும் இரண்டு வகைகளில் அடங்கும். இவையே பதா₃ர்த்த₂ த்₃வயம் எனப்படும். உண்மையறிவுக்கு முக்கிய காரணமாயிருப்பது ப்ரமாணமாகும். (இது 65வது கேள்வியில் விவரிக்கப்படும்.) ப்ரமாணத்தால் அறியப்படுவது ப்ரமேயமாகும்.

*18. ப்ரமேயத்₃வயம் என்றால் என்ன?*

த்₃ரவ்யம், அத்₃ரவ்யம் என்று ப்ரமேயங்கள் இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகின்றன. பலவிதமான நிலைகளை அடையும் உபாதா₃ன காரணமான பொருள் த்₃ரவ்யம் எனப்படும். அப்படியல்லாதது அத்₃ரவ்யமாகும்.

*19. த்₃ரவ்யத்₃வயம் என்றால் என்ன?*

ஜட3ம், அஜட3ம் என்று த்3ரவ்யம் இரண்டு வகைப்படும். தானே பிரகாஶிக்கும் த்3ரவ்யம் அஜட3மாகும். தானே பிரகாஶியாத த்3ரவ்யம் ஜட3மாகும்.

*20 ஜட3த்3வயம் என்றால் என்ன?*

ஜட3த்3ரவ்யம் மூலப்ரக்ருதி என்றும், காலம் என்றும் இரண்டு வகைப்படும். 'பொங்கைம்புலனும்' [திருவாய் 10-7-10] என்னும் பாசுரத்தில் ஆழ்வாரால் அநுஸந்தி4க்கப்பட்டவையாய், மஹான், அஹங்காரம், ஐந்து தன் மாத்திரைகள், ஐந்து பூ4தங்கள், பதினொரு இந்த்3ரியங்கள் என்னும் 23 தத்துவங்களாகப் பரிணமிப்பது மூலப்ரக்ருதி. வருங்காலம், நிகழ்காலம், கழிந்தகாலம் என்று மூன்று வகைப்பட்டது காலம்.

*21. அஜட3த்3வயம் என்றால் என்ன?*

அஜட3த்3ரவ்யம் பராக் என்றும், ப்ரத்யக் என்றும் இரண்டு வகைப்படும். தனக்குத்தானே பிரகாஶிக்கும் அஜட3த்3ரவ்யம் 'ப்ரத்யக்' ஆகும். பிறருக்குத் தானே பிரகாஶிக்கும் அஜட3த்3ரவ்யம் 'பராக்' ஆகும்.

*22. *(அஜட3) பராக்த்3வயம் என்றால் என்ன?*

'பராக்' ஆன அஜட3த்3ரவ்யம் நித்யவிபூ4தி என்றும், த4ர்மபூ4தஜ்ஞானம் என்றும் இருவகைப்படும். நித்யவிபூ4தி 12வது கேள்வி பதிலிலும், த4ர்மபூ4தஜ்ஞானம் 16வது கேள்வி பதிலிலும் விவரிக்கப்பட்டுள்ளது.

*23. ப்ரத்யக்த்3வயம் என்றால் என்ன?*

தனக்குத்தானே பிரகாஶிக்கும் 'ப்ரத்யக்' ஆன அஜட3த்3ரவ்யம் ஜீவன் என்றும், ஈஶ்வரன் என்றும் இருவகைப்படும். 8, 11 கேள்விகளின் பதில்களில் இதன் விவரணம் உள்ளது.

*24. ப3த்3த4த்3வயம் என்றால் என்ன?*

பு3பு4க்ஷு, முமுக்ஷு என்று ப3த்3த4 ஜீவன் இரண்டு வகைப்படுவான். இவ்வுலகப் ப2லன்களில் விருப்பமுள்ளவன் பு3பு4க்ஷு; மோக்ஷத்தில் இச்சை2யுள்ளவன் முமுக்ஷு.

---

* ஜட3ப்பொருள் அனைத்துமே பிறர்க்கே பிரகாசிக்கையால் 'பராக்' ஆகும்.

*25. பு₃பு₄க்ஷுத்₃வயம் | என்றால் என்ன ?*

அர்த்த₂காமபரனும், த₄ர்மபரனும் பு₃பு₄க்ஷுக்களாவார். நாலுவகைப் புருஷார்த்த₂ங்களான த₄ர்மார்த்த₂காமமோக்ஷங்களில் பொருளிலும், காமத்திலும் ஈடுபட்டவன் அர்த்த₂காமபரன். த₄ர்மத்தில் ஈடுபட்டவன் த₄ர்மபரன்.

*26. த₄ர்மபரத்₃வயம் என்றால் என்ன ?*

தே₃வதாந்தரபரனும், ப₄க₃வத்பரனும் த₄ர்மபரர்களாவர். ஸ்ரீமந்நாராயணனையொழிந்த இதர தே₃வதைகளை வணங்குபவர்கள் தே₃வதாந்தரபரர்களாவர். ஸ்ரீமந்நாராயணனையே வணங்குபவர்கள் ப₄க₃வத்பரர்களாவர்.

*27. முமுக்ஷு த்₃வயம் என்றால் என்ன ?*

கைவல்யார்த்தி₂, பரமமோக்ஷார்த்தி₂ ஆகிய இரண்டு வகையினரும் முமுக்ஷுக்களாவர். மோக்ஷத்தில் தன் ஆத்மாவையே தான் அநுப₄விக்க விரும்புபவன் கைவல்யார்த்தீ₂ எனப்படுவான். மேலான மோக்ஷத்தையடைந்து எம்பெருமானை அநுப₄விக்க விரும்புபவன் பரமமோக்ஷார்த்தீ₂ எனப்படுவான்.

*28. பரமமோக்ஷார்த்தி₂த்₃வயம் என்றால் என்ன ?*

ப₄க்தியை உபாயமாகக் கொண்டு மோக்ஷத்தை அடைய விரும்பும் ப₄க்தனும், ப்ரபத்தியை உபாயமாகக் கொண்டு, மோக்ஷத்தை அடைய விரும்பும் ப்ரபந்நனும் பரமமோக்ஷார்த்தி₂களாவார்.

*29. ப்ரபந்நத்₃வயம் என்றால் என்ன ?*

ஏகாந்தி பரமைகாந்தி என்று ப்ரபந்நன் இருவகைப்படுவான். எம்பெருமானிடம் மோக்ஷத்தோடு இவ்வுலகப்ப₂லன்களையும் விரும்புபவன் ஏகாந்தியாவான். எம்பெருமானிடம் மோக்ஷ ப₂லன் ஒன்றையே விரும்புபவன் பரமைகாந்தியாவான்.

*30. பரமைகாந்தித்₃வயம் என்றால் என்ன ?*

த்₃ருப்தன், ஆர்த்தன் என்று பரமைகாந்தி இருவகைப்படுவான். த்₃ருப்தன் என்றால் ஆறியிருப்பவன் என்று பொருள்.

ஆர்த்தன் என்றால் ப்ராப்யத்வரையாலே பதறுகிறவன் என்று பொருள். 'இந்த சரீரம் கழிந்த பிறகு மோக்ஷம் கிடைத்தால் போதும்' என்று ஆறியிருப்பவன் த்3ருப்தன். அதற்கும் முன் விரைவிலேயே மோக்ஷம் கிடைக்கவேணும் என்று பதறுகிறவன் ஆர்த்தன். த்3ருப்தன் ஆறியிருக்கைக்கு அநாதி3 வாஸனையினாலே சரீரத்தை விடுவதற்கு விரும்பாமை காரணமாகலாம். தொண்டரடிப்பொடியாழ்வார் போன்ற சிலருக்கு "அச்சுவை பெறினும் வேண்டேன்" [திருமாலை-2] என்கிறபடியே அர்ச்சாவதாரத்தில் ஈடுபாடு காரணமாகலாம். பா4க3வதர்களிடத்தும், ஆசார்யனிடத்தும் ஈடுபாடு காரணமாகலாம். பரமைகாந்திப்ரபன்னனை ஸ்வக3தஸ்வீகாரநிஷ்ட2ன், பரக3தஸ்வீகாரநிஷ்ட2ன் என்றும் இருவகையாகப் பிரிப்பதுண்டு. மோக்ஷத்தில் எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யம் தனக்கும் ஆனந்த3த்தை விளைப்பது என்று கருதுகையாலே ப்ரபத்தியில் உபாய பு3த்3தி4யை வைப்பவன் ஸ்வக3த ஸ்வீகாரநிஷ்ட2ன். மோக்ஷத்தில் எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யத்தில் தன் ஆனந்த3த்தை உத்3தே3ஶ்யமாகக் கொள்ளாமல் எம்பெருமானுடைய ஆனந்த3த்தையே உத்3தே3ஶ்யமாகக் கருதுகையாலே, ப்ரபத்தியை உபாயமாக நினையாமல், நிர்ஹேதுக க்ருபையோடு கூடிய எம்பெருமானையே உபாயமாக நினைப்பவன் பரக3தஸ்வீகார நிஷ்ட2னாவான்.*

*31. விபூ4தித்3வயம் என்றால் என்ன?*

(1) 'உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடையார் என்னும் கம்பராமாயணக் கடவுள் வாழ்த்தின்படி, எம்பெருமானுக்கு அளவற்ற லீலாரஸத்தை விளைக்கும் இந்த ப்ராக்ருத உலகமான லீலாவிபூ4தி. (2) நித்யமுக்தர்கள் அவனை என்றும் அநுப4வித்து வாழ்கின்ற அப்ராக்ருத லோகமான நித்யவிபூ4தி ஆகிய இரண்டும் விபூ4தித்3வயம் ஆகும்.

---

*[17 முதல் 30 வரையிலுள்ள கேள்வியின் பதில்கள் நம்முடைய யதீந்த்3ரமததீ3பிகாஸந்மதகாரிகாவளீ விவரணத்தில் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. விலை ரூ. 10-50. சாதா தபாற்கூலி 1-50. "ஸுதர்சனம் காரியாலயம், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17." என்னும் விலாசத்தில் கிடைக்கும்.]*

*32 கரணத்ரயம் என்ருல் என்ன ?*

மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களும் கரண த்ரயம் ஆகும்.

*33. காலத்ரயம் என்ருல் என்ன ?*

சென்ற காலம், வருங்காலம், நிகழ்காலம் என்னும் மூவகைக் காலங்களும் காலத்ரயமாகும்.

*34. கர்மத்ரயம் என்ருல் என்ன ?*

மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களின் கார்ய மான நினைக்கை, சொல்லுகை, செய்கை என்னும் மூன்றும் கர்மத்ரயம் ஆகும்.

*35. அசித் த்ரயம் என்ருல் என்ன ?*

மூலப்ரக்ருதியாகிற அவ்யக்தம், அதன் கார்யமான வ்யக்தமான அசித்தத்வங்கள், காலம் ஆகிய மூன்றும் அசித் த்ரயம் ஆகும்.

*36. கு₃ணத்ரயம் என்ருல் என்ன?*

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் (அசேதநகு₃ணங்கள்) மூன்றும் கு₃ணத்ரயம் ஆகும்.

*37. ஆஶாத்ரயம் என்ருல் என்ன ?*

மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசை ஆகிய மூன்றும் ஆஶாத்ரயம் எனப்படும்.

*38. அபராத₄த்ரயம் என்ருல் என்ன ?*

எம்பெருமான் திறத்தில் அபசாரமாகிற ப₄க₃வத₃பசாரம், அவனடியார்கள் திறத்து அபசாரமாகிற பா₄க₃வதாபசாரம், அவர்கள் இருவர் திறத்திலும் காரணமில்லாமலே அபசாரப் படுமதாகிற அஸஹ்யாபசாரம் ஆகிய மூன்றும் அபராத₄ த்ரயம் எனப்படும்.

*39. ஈஷணுத்ரயம் என்ருல் என்ன ?*

அர்த்தே₂ஷணை (பணத்தில் ஆசை), தா₃ரேஷணை (மனைவியிடம் ஆசை), புத்ரேஷணை (பிள்ளையிடம் ஆசை) ஆகிய மூன்றும் ஈஷணுத்ரயம் ஆகும்.

*40. தத்வத்ரயம் என்றால் என்ன?*

சித், அசித், ஈச்வரன் ஆகிய மூன்றும் தத்வத்ரயம் ஆகும். 8வது கேள்வி பதிலில் இது விளக்கப்பட்டுள்ளது.

*41. தாபத்ரயம் என்றால் என்ன?*

ஆத்₄யாத்மிகம் (ஆத்மா எனப்படும் சரீரத்தில் உண்டாகும் நோய் முதலானவை), ஆதி₄தை₃விகம் (தெய்வச் செயலான இடி முதலானவற்றால் ஏற்படுமவை), ஆதி₄பௌ₄திகம் (பஞ்ச பூ₄தங்களால் ஏற்படுமவை) என்னும் மூன்று தாபங்களும் (வருத்துமவை) தாபத்ரயம் எனப்படும்

*42. தே₃வதாத்ரயம் என்றால் என்ன?*

பரம்பொருளான நாரணனுடைய அடியார்களான தே₃வதைகளுள் தலைவர்களான பிரமன், உருத்திரன், இந்திரன் ஆகிய மூவரும் தே₃வதாத்ரயம் எனப்படுவர்.

*43 மஹிஷீத்ரயம் என்றால் என்ன?*

பரமபத₃த்தில் ஆதி₃சேஷனாகிற சீரியசிங்காசனத்தில் எம்பெருமானோடு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பூ₄மி நீளா தே₃விகளாகிற மூவரும் மஹிஷீத்ரயமாவர்.

*44. ஆத்மத்ரயம் என்றால் என்ன?*

நித்யர், முக்தர், ப₃த்₃த₄ர் என்னும் மூவகை ஜீவாத்மாக்களும் ஆத்மத்ரயம் எனப்படுவர். 11வது கேள்விபதிலில் இது விவரிக்கப்பட்டுள்ளது.

*45. பரிச்சே₂த₃த்ரயம் என்றால் என்ன?*

காலத்தால் அளவுபட்டிருக்கை, தேசத்தால் அளவுபட்டிருக்கை, வஸ்துவால் அளவுபட்டிருக்கை என்னும் மூன்று வித₄மான பரிச்சே₂த₃ங்களும் (அளவுகளும்) பரிச்சே₂த₃த்ரயமாகும். இந்த மூன்று வகைப்பட்ட அளவுகளும் இல்லாத அநந்தன் எம்பெருமான் ஒருவனே.

*46. காரணத்ரயம் என்றால் என்ன?*

குடத்துக்குக் குயவன்போலே ஒரு பொருளைச் செய்பவன் நிமித்த காரணமாவான். மண்குடத்துக்கு மண்போலே, அப்

பொருள் எதிலிருந்து செய்யப்படுகிறதோ அது உபாதாந காரணமாகும். குயவன் மண்குடத்தைச் செய்யும்போது அவனுக்கு உதவிபுரியும் தண்டம், சக்கரம் முதலானவைபோலே, நிமித்த காரணமாயிருப்பவனுக்கு அப்பொருளைச் செய்ய உதவும் பொருள்கள் ஸஹகாரிகாரணமாகும். நிமித்தம், உபாதானம், ஸஹகாரி என்னும் மூன்றுமே காரணத்ரயமாகும். உலகிற்கு இந்த மூவகைக் காரணமாகவும் இருப்பவன் எம்பெருமான்.

*47. விரோதித்ரயம் என்றால் என்ன?*

தனக்குத்தானே தலைவன் என்னும் நினைவாகிற ஸ்வாதந்த்ர்யம், பிரமன் உருத்திரன் முதலானோர்க்குத் தான் அடிமைப்பட்டவன் என்னும் நினைவாகிற அந்யஶேஷத்வம், தேஹமே தான் என்னும் நினைவாகிற தேஹாத்மாபிமானம் என்னும் மூன்று நினைவுகளும் எம்பெருமானை அடைவதற்கு விரோதிகள் (தடைகள்). ஆகையால் இவை விரோதித்ரயம் எனப்படும்.

*48. ஸுக்ருதத்ரயம் என்றால் என்ன?*

ஸ்ரீவசனபூஷணம் 381-வது சூர்ணையின் வ்யாக்யானத்தில் விவரிக்கப்பட்ட ஆநுஷங்கிகம், ப்ராஸங்கிகம், யாத்ருச்சிகம் என்னும் மூன்று வகைப்பட்ட ஸுக்ருதங்களும் (புண்ணியங்களும்) ஸுக்ருதத்ரயம் எனப்படும்.

*49. ஆநுகூல்யத்ரயம் என்றால் என்ன?*

எம்பெருமான் விஷயத்தில் (1) அத்வேஷம் எனப்படும் த்வேஷமின்மை, (2) ஆபிமுக்யம் எனப்படும் ஈடுபாடு, (3) அவனடியார்களோடு பேசிப் போதுபோக்குகையாகிற ஸத் ஸம்பாஷணம் ஆகிய மூன்றும் ஆநுகூல்யத்ரயம் எனப்படும்.

*50. அநுவர்த்தநத்ரயம் என்றால் என்ன?*

ஆசார்யன் விஷயத்தில் (1) சரீரம், (2) பொருள், (3) உயிர் என்னும் மூன்றையும் ஸமர்ப்பிக்கை அநுவர்த்தநத்ரயம் எனப்படும்.

*51. அதிகாரத்ரயம் என்றால் என்ன?*

(1) நல்ல கேள்வி ஞானம் உடையவனாகை, (2) வயது முதிர்ந்தவனாயிருக்கை, (3) வேதார்த்தம் அறிந்தவனாயிருக்கை

என்று ஆசார்யனுக்கு இருக்கவேண்டிய மூவகையான அதி, காரங்களும் (தகுதிகளும்) அதி₃காரத்ரயம் எனப்படும்.

*52. மந்த்ரத்ரயம் என்றால் என்ன?*

திருமந்த்ரம், த்₃வயம், சரமஶ்லோகம் என்பவை ஸ்ரீ வைஷ்ணவனுக்கு ஆசார்யன் அவசியம் உபதே₃சிக்க வேண்டிய மந்த்ரத்ரயமாகும்.

*53. பத₃த்ரயம் என்றால் என்ன?*

திருவஷ்டாக்ஷரமாகிற திருமந்த்ரத்தில் அடங்கிய மூன்று பத₃ங்கள் பத₃த்ரயம் எனப்படும். அவற்றில் முதல்பத₃மான ப்ரணவம் 'ஜீவன் எம்பெருமானைத் தவிர மற்றெவருக்கும் உரியவனுயிராதவன்' என்றும், இரண்டாவது பத₃மான நமஶ்ஶப்₃த₃ம் 'ஜீவன் எம்பெருமானையொழிய வேறெதையும் உபாயமாகக் கொள்ளத் தகாதவன்' என்றும், 'நாராயணாய' என்னும் மூன்றாவது பத₃ம் 'நாரணனுடைய முகமலர்த்திக்கேயான கைங்கர்யமொழிய வேறொன்றும் ஜீவனுக்குப் பயனன்று' என்றும் விளக்குகின்றன.

*54. ஜ்ஞாநத்ரயம் என்றால் என்ன?*

முற்கூறிய மூன்று பத₃ங்களாலும் முறையே அறியப்படும் 1) தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிகையாகிற ஸ்வஸ்வரூப ஜ்ஞானம், 2) ப்ராபகம் எனப்படும் உபாயத்தைப் பற்றிய ஜ்ஞானம், 3) ப்ராப்யம் எனப்படும் உபேயத்தைப் பற்றிய ஜ்ஞானம் என்னும் மூன்று அறிவும் ஜ்ஞானத்ரயம் ஆகும்.

*55. ஶங்காத்ரயம் என்றால் என்ன?*

ப்ரபன்னனுக்கு ஏற்படக்கூடிய மூன்று ஐயங்கள் ஶங்காத்ரயமாகும். அவையாவன—(1) அநாதி₃காலமாகச் சேர்ந்திருக்கும் புண்யபாபங்கள் ஶரணாக₃தியாகிற எளிய உபாயத்தால் அழிந்து விடுமோ? (2) தலைசிறந்த பரமபுருஷார்த்த₂ம் இத்தனை எளிதில் கிடைக்குமோ? (3) ப்ரபத்தியாகிற மிக எளியஉபாயம் மிகச்சிறந்த பயனை அடைவிக்க முடியுமோ? என்பவை ஶங்காத்ரயமாகும்.

*56. ஆகாரத்ரயம் என்றால் என்ன?*

ஜீவனுடைய ஆகாரத்ரயம் 13வது கேள்வியின் பதிலில் விளக்கப்பட்டுள்ளது. மேன்மை, நீர்மை, வடிவழகு என்னும்

மூன்றும் எம்பெருமானுடைய ஆகாரத்ரயமாகும். திருவாய்மொழி 5—3—5, திருவாய் 1—10—11, திருவாய் 5—1—5, அமலனாதிபிரான் 10, திருமாலை 2, திருவாசிரியம் 1 ஆகிய அருளிச்செயல் ஒவ்வொன்றிலும் எம்பெருமானுடைய முக்கியமான மூன்று ஆகாரங்களாகிற மேன்மை, நீர்மை, வடிவழகு என்னும் மூன்றும் சேர்ந்த பசுங்கூட்டு ஆழ்வார்களால் அநுஸந்தி₄க்கப்பட்டுள்ளது.

*57. பர்வத்ரயம் என்றால் என்ன?*

திருமந்திரத்தின் மூன்று பத₃ங்களிலும் சொல்லப்பட்ட அந்ய ஶேஷத்வ நிவ்ருத்தி, அந்யோபாய நிவ்ருத்தி, ப்ரயோஜநாந்தர நிவ்ருத்தி எனப்படும் மூவகைப்பட்ட விரோதி₄நிவ்ருத்திகளையும் படிப்படியாக எம்பெருமான் ஜீவனுக்கு உண்டாகும்படி செய்கிறான். இது பர்வத்ரயமாகும்.

*58. லோகத்ரயம் என்றால் என்ன?*

பூ₄மி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்க₃ம் என்னும் மூன்றும் லோகத்ரயமாகும். பூமிக்குக் கீழுள்ள உலகங்கள், பூமி, பூமிக்கு மேலுள்ள உலகங்கள் என்னும் மூன்றையும் லோகத்ரயம் (மூவுலகு) என்று கூறுவதும் உண்டு.

*59. பாத₃த்ரயம் என்றால் என்ன?*

இந்த லீலாவிபூ₄தியைக் காட்டிலும் மும்மடங்கு பெரியதாகையாலே த்ரிபாத்₃விபூ₄தி எனப்படும் நித்யவிபூ₄தி பாத₃த்ரயம் எனப்படும்.

*60. ஸாம்யத்ரயம் என்றால் என்ன?*

பரமபத₃த்தில் எம்பெருமான் ஜீவனுக்கு அருளும் (1) ரூபஸாம்யம், (2) கு₃ணஸாம்யம், (3) போ₄க₃ஸாம்யம் என்னும் மூன்றும் ஸாம்யத்ரயமாகும்.

*61. புன்மைத்ரயம் என்றால் என்ன?*

ப₄க₃வத் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்த₂த்தைத் தவிர்ந்த மற்ற பயன்களுக்குள்ள (1) மிகத்தாழ்ந்ததாயிருக்கை (அல்பம்), (2) நிலையற்றதாயிருக்கை (அஸ்தி₂ரம்), (3) இனிமையற்றதாயிருக்கை (அபோ₄க்₃யம்) என்னும் மூன்று புன்மைகளும் புன்மைத்ரயம் எனப்படும்.

*62. ஸூக்ஷ்மத்ரயம் என்றால் என்ன?*

(1) பஞ்சபூ$_4$தஸூக்ஷ்மம், (2) இந்திரியங்கள், (3) ப்ராணன் என்று ப$_3$த்$_3$த$_4$ஜீவனுடைய ஸூக்ஷ்மத்தில் அடங்கிய மூன்றும் ஸூக்ஷ்மத்ரயம் எனப்படும்.

*63. அக்ஷரத்ரயம் என்றால் என்ன?*

ப்ரணவத்தில் அடங்கிய அகார உகார மகாரங்களாகிற மூன்றும் அக்ஷரத்ரயம் எனப்படும்.

*64. தோ$_3$ஷத்ரயம் என்றால் என்ன?*

(1) அறிவு உண்டாகாமையாகிற *அஜ்ஞானம்,* (2) *ஶங்*க$_2$த்தை மஞ்சள் நிறமுள்ளதாக அறியுமிடத்திற்போலே, ஒரு பொருளின் தன்மையை வேறாக அறிகையாகிற *அந்யதா$_2$ஜ்ஞானம்.* (3) சிப்பியை வெள்ளியாக அறியுமிடத்திற்போலே, ஒரு பொருளையே வேறொரு பொருளாக அறிகையாகிற *விபரீத ஜ்ஞானம்* என்னும் மூன்றும் தோ$_3$ஷத்ரயமாகும்.

*65. ப்ரமாணத்ரயம் என்றால் என்ன?*

ப்ரத்யக்ஷம், அநுமானம், *ஶப்$_3$த$_3$ம்* என்னும் மூன்றும் உண்மையறிவுக்கு முக்கிய காரணமான ப்ரமாணத்ரயம் என்று நம் ஸித்$_3$தா$_4$ந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. இதன் விரிவு தீ$_3$பிகா காரிகாவளீ விவரணத்தில் கண்டுகொள்வது.

பாபு, சென்னை-1.

*66. "ஆகாஶாத் பதிதம் தோயம் யதா$_2$ க$_3$ச்ச$_2$தி ஸாக$_3$ரம், ஸர்வதே$_3$வ நமஸ்கார: கேஶவம் ப்ரதி க$_3$ச்ச$_2$தி" என்று நாம் அநுஸந்தித்துக் கொண்டிருக்கும்போது மற்ற தேவதைகளைத் தொழக்கூடாது என்ற நிர்ப்ப$_3$ந்த$_4$ம் ஏன்? எந்த தே$_3$வதையைத் தொழுதாலும் அது கேஶவனைத் தானே அடையப் போகிறது?*

---

[32 முதல் 65 வரையிலுள்ள த்ரயங்கள் 'வார்த்தாமாலை'யில் பல வார்த்தைகளில் குறிக்கப் பெற்றுள்ளன. குறிப்பாக, 431, 432 வார்த்தைகள் காணத்தக்கவை. நமது விவரணத்தோடு கூடிய வார்த்தாமாலை சில மாதங்களில் ஸுதர்சனம் வெளியீடாக வெளிவரும்]

எந்த தெய்வத்தை நமஸ்கரித்தாலும் அது அந்த தெய்வத்திற்கு அந்தர்யாமியான கேசவனை அடையும் என்று இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது. அந்தந்த தெய்வங்களின் பக்தர்கள் அந்தந்த தெய்வங்களுக்குச் செய்யும் நமஸ்காரமும், சாஸ்த்ரவிதியினுல் ஜ்ஞாநிகளும் கர்மங்களை அநுஷ்டிக்கும் போது 'இந்த்ராய நம:' முதலான வாக்கியங்களில் மற்ற தெய்வங்களுக்குச் செய்யும் நமஸ்காரமும் அந்தர்யாமியான நாராயணனையே அடையும் என்னும் கருத்துடையது இந்த ச்லோகம். சாஸ்திர விதியினுல் மற்ற தெய்வங்களுக்கு இந்த எண்ணத்துடன் செய்யும் நமஸ்காரத்தை யாரும் தடைசெய்ய வில்லை. வேத சாஸ்த்ரங்களுக்கு புரணுக, தாமஸமான ஆகமங்களையும் புராணங்களையும் அடிப்படையாகக்கொண்டு, மற்ற தெய்வங்களுக்கு ப்ராதான்யமும், கேசவனுக்கு அப்ராதான்யமும் அளித்து, கட்டப்பட்டிருக்கும் தேவாலயங்களுக்குச் சென்று வழிபடுவதையே சாஸ்த்ரங்களும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் தடை செய்கின்றனர்.

கா. தி. அண்ணுமலை, வில்லிவாக்கம்.

*67. விசுவாமித்திரருடன் இராம இலக்குவர் மிதிலை நகர இராச வீதியில் செல்கின்றனர். உளம் விரும்பி உப்பரிகை மேலிருந்த சீதையும், வீதியில் நடந்து செல்லும் இராமரும் ஒருவரை ஒருவர் பார்க்கின்றனர். இதனைக் கம்பர், 'அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினள்' என்று கூறியுள்ளார்.*

*இராமனை 'அண்ணல்' என்று சிறப்பித்த கம்பர் சீதையை யாதானுமோர் அடைமொழியால் சிறப்பிக்காமல் வெறுமனே 'அவளும் நோக்கினள்' என்றது ஏன் ? 'அணங்கும் நோக்கினள்' என்பதுபோல ஏன் சிறப்பிக்கவில்லை ?*

'எண்ணரு நலத்தினள் இனையள் நின்றுழி' என்று இப்பாடல் தொடங்குகிறது. 'எவராலும் நினைக்கமுடியாத பெருமையை உடையவள்' என்று சீதையை வருணித்துக் கொண்டே கம்பன் இப்பாடலைத் தொடங்குகிறன். 'இனையள்' என்னும் பதத்தால் இதற்கு முந்திய இருபாடல்களில் தான்

சீதைக்கு வருணித்த பெருமைகளையும் சுட்டிக்காட்டுகிறான். ஈற்றடியில் உள்ள 'அவளும்' என்னும் பதம் இப்பெருமைகள் அனைத்தையும் காட்டுகிறதாகையாலே 'அணங்கு' என்னும் பதத்தைக் காட்டிலும் சிறப்புற்றது.

*68. பொழுது விடிந்தால் இராமனுக்கு முடிசூட்டுவிழா நடக்கப்போகிறதென்று முன் நாளே தயரதன் முடிவு செய்து விட்டான். இது ஊர் அறிந்த செய்தி.*

*முடிசூட்டு விழா நடைபெறும் காலை வேளையில் இராமனைப் பெற்ற தாய் கோசலை 'முடிசூட்டு விழா' நடைபெறும் இராஜ சபைக்குப் போகாமல் மகன் இராமன் முடிசூட்டிக்கொண்டு தன் மாளிகைக்கு வருவான் எனக் காத்திருந்ததாக, 'மௌலி சூடினன் வரும்' என்று கம்பர் கூறியுள்ளது ஏன்?*

"அஸூர்யம் பச்யா ராஜதாரா:" (அரசரின் மனைவியரான அந்தப்புரஸ்த்ரீகள் ஸூர்யனையே காணமாட்டார்கள்) என்கிற பண்டைக்கால நடைமுறையின்படி, அந்தப்புரத்தைவிட்டு வெளியிலே வராத ராஜபத்னிகள் ஊரே கூடியிருக்கும் முடி சூட்டு விழாவுக்கு எப்படி வருவார்கள்?

R. பார்த்தசாரதி, சென்னை-80.

*69. தினமணிக்கதிரில் மணிவண்ணன் பதிலில் திருக் குறுங்குடித்தலம் 'அரியும் சிவனும் ஒன்று' என்று நிரூபிப்பதாக திரு. நா. பார்த்தசாரதி கூறியிருக்கிறார். இது சரியா?*

இதுபற்றி "திருக்குறுங்குடி கோவிலில் சிவனுக்குப் 'பக்கம் நின்றார்' என்று திருமங்கையாழ்வாராலேயே பெயர் குறிக்கப்பட்டிருக்கிறது. ஒருவர் பக்கத்தில் மற்றொருவர் நிற்பதால் இருவரும் ஒன்று என்று ஆகிவிடாது. மேலும், பெருமாள் புறப்பாடுகளில் பக்கம் நின்றார் ஸந்நிதிக்கு முன் வரும்போது 'பக்கம் நின்றாற்கு ஒன்றும் குறையில்லையா?' என்று அர்ச்சகர்மூலம் கேட்பதும், சிவன் கோவில் குருக்கள் முன்வந்து 'ஒன்றும் குறையில்லை' என்று விண்ணப்பிப்பதும் இக்கோவிலில் இன்றும் நடைபெறுகிறது. இவற்றிலிருந்து இக்கோவிலில் சிவன் பரிவாரதேவதையே என விளங்குகிறது. இதை தினமணிக்கதிரில் வெளியிட்டுப் பொதுமக்களுக்கு

உண்மையை உணர்த்தவேண்டும்'' என்று தினமலரிக்கதிர் காரியாலயத்திற்குக் கடிதம் எழுதினேம். கதிர் நிர்வாகிகளுக்கு உண்மையை வெளியிடும் நேர்மையில்லே. திரு. நா. பார்த்தசாரதி கதிர் ஆசிரியராயில்லே என்று தெரிந்தவுடன் அவருக்குக் கடிதத்தின் நகலே அனுப்பி, அவர் கருத்தில் மாற்றம் விளேந்ததா என்று கேட்டிருந்தோம். நாம் 12—4—1982 அன்று சென்னே சென்றிருந்தபோது திரு. நா. பார்த்தசாரதி போன்மூலம் நம்மோடு தொடர்புகொண்டு 'தங்கள் விளக்கத்தைக் கண்டபின் என்னுடைய கருத்து மாறிவிட்டது' என்று கூறினர். ஆகையால் இதுபற்றி இனி சர்ச்சைக்கு இடமில்லே.

S. வேங்கடம், சமயபுரம்.

*70. 4—2—82 குமுதத்தில் ''ராமாநுஜர் மற்ற வருணத்தவர்களுக்கும் பூணூலே மாட்டி, அவர்களே அந்தணர்களாக்க முயன்று தோல்வியடைந்தார்'' என்று திராவிடக் கழகத்தைச் சேர்ந்த கி. வீரமணி எழுதியிருக்கிறர். 'வீரமணியின் வாதத்தில் பகுத்தறிவு இல்லே' என்னும் தலேப்பில் 1—4—82 துக்ளக்கில் எழுதிய கட்டுரையில் வி. பி. சிந்தன் என்பவர் 'ராமாநுஜர் புலேயருக்குப் பூணூல் போட்டுச் சாதியை ஒழிக்க முயன்றார்' என்று எழுதியிருக்கிறர். இவற்றில் உண்மை ஏதேனும் இருக்கிறதா ?*

இவற்றில் உண்மை ஒரு சிறிதும் இல்லே. ஸ்ரீராமாநுஜரைப் பற்றிய எந்த வரலாற்று நூலிலும் இப்படி ஒரு செய்தி கிடையாது. ஸ்ரீராமாநுஜர் தம் நூல்களில் அவரவர் தத்தம் வர்ணுச்ரமங்களுக்குரிய தர்மங்களேக் கடைப்பிடிக்கவேண்டும் என்று பலவிடங்களில் உபதேசித்திருக்கிறர். இத்தகையவர் மனம்போனபடி அனேவருக்கும் பூணூலே மாட்டிவிட முயன்றார் என்று எழுதுவது பரிஹஸிக்கத்தக்கது. விஷயம் அறியாத வீரமணியும், சிந்தனும் இப்படி எழுதினுலும், விஷயமறிந்தவர்கள் நிறைந்த குமுதமும், துக்ளக்கும் இந்தப் பெரும் பொய்யை வெளியிட்டது மிகவும் வருந்தத்தக்கது. பல வைஷ்ணவர்கள் இதை மறுத்து எழுதியிருப்பார்கள் என்பது நமக்குத் தெரியும். அக்கடிதங்களில் எதையும் வெளியிடாதது பத்திரிகை தர்மத்தையே மதிக்காத செயலாகும்.

T. S. ஸ்ரீனிவாசன், விசாகப்பட்டினம்.

*71. தேவாலயங்களில் பிரபந்தப் பாசுரங்களை ஸேவிக்கும் போது ற்கரம் தொடர்புடைய சொற்களை வேறு முறையில் உச்சரிப்பது எதற்காக ?*

ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களை உச்சரிக்கும்போது கடுமை தோற்றலாகாது எனும் காரணத்தாலேயே அத்யாபகர்கள் 'வென்ற' என்பதை 'வென்ன' என்றும், 'சிற்றம்' என்பதை 'சித்தம்' என்றும் உச்சரிக்கிறார்கள்.

*72. "திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே" என நம்மாழ்வார் அருளியிருக்கும்போது நாம் சகுனம் ராகுகாலம் நாள் இவைகளைப்பார்த்தல் போன்ற செயல்களைச் செய்தல் அவசியமா ?*

நம் வினை ஓயும் என்று நம்மாழ்வார் அருளியது மோக்ஷத்துக்குத்தடையான நம் பாபங்கள் நீங்கும் என்னும் கருத்தை உடையது. லௌகிகப்ரவ்ருத்திகளைச் செய்யும் போது அந்த முயற்சிகளுக்குத் தடையேற்படாமல் இருக்க நாள், நக்ஷத்திரம், சகுனம், ராகுகாலம் எமகண்டம் த்யாஜ்யம் முதலானவை இல்லாமலிருத்தல் முதலானவற்றைப் பார்க்கும்படி சாஸ்த்ரம் விதிக்கிறது. அதன்படி பெரும்பாலான வைதிகர்கள் இவற்றைப் பார்க்கிறார்கள். எம்பெருமானைத் தஞ்சமாகக் கொண்ட நாம் இவற்றைப் பார்க்க வேண்டியதில்லை எனும் உறுதியுடையவர்கள் அப்படியும் இருக்கலாம்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம் [ 73—75 கேள்விகள் ]

*73. 4—4—82 கல்கியில் 'இலக்கியத்தில் இறையுணர்வு' எனும் தொடரில் புலவர் கீரன் 'நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான் தன்னையே தான் வேண்டும் செல்வம் போல்' என்னும் குலசேகராழ்வார் பாசுரத்துக்கு "ஒருவன் இவ்வுலகில் பொருட்செல்வத்தையே முழுமையாகக் கருதாமல் இறைவனையே கருதினால், அவன் தானே இறைவன் ஆகிவிடுகிறான். பின்னர் சிந்தையில் நிறைவுக்குக் கேட்க வேண்டுமா ? தன் உள்ளம் ஆன்மநாயகனையே எண்ணி விடுவதால் தன்னையே தான் விரும்பும் மனிதனாகிவிடுகிறான்! அவனுக்கு வேறு என்ன குறை ?" என்று பொருள் எழுதியிருக்கிறார், இது சரியா ?*

இப்பொருள் சிறிதும் பொருந்ாது. 'அவன் தானே இறைவனுகிவிடுகிருன்' என்று ஶ்ரேன் எழுதியிருப்பதற்கு ஆழ்வார் பாசுரத்தில் எந்த ஆதாரமும் இல்லை. ''எம்பிரானே! நின்னையே வேண்டி நீண்ட செல்வத்தை வேண்டாதவன் தன்னையே அப்பெரிய செல்வமும் மோக்ஷ செல்வமும்கூட தானே மேல் விழுந்து அடைவதுபோலே' என்று பாசுரம் தெளிவாகப் பொருள்படும்போது' அவன் தானே இறைவனுகி ருன்' என்று ஶ்ரேன் நிராதாரமாக எழுதியிருப்பது மிகவும் முறையற்றது.

*74 கல்கியில் 'ரவிகுல திலகன்' என்னும் நாவலை எழுதி வரும் செம்பியன் 28—3—82 கல்கியில் '' மதுரகவியாழ்வார் இருமன்னர்களுக்கும் உத்தர (முக்கிய) மந்திரியாகப் பணி யாற்றியவர் என்று எழுதியிருக்கிருர். இதற்கு ஆதாரம் உண்டா ?*

பதினேழு வருடங்களுக்கு முன்பே இதுபற்றி ஸுதர்சனத்தில் நாவலாசிரியர் ஸ்ரீவேணுகோபாலனுக்கும் நமக்கும் ஓர் சர்ச்சை ஏற்பட்டது. T. K. S. சகோதரர்களுக்காக அவர் 'அமைச்சர் மதுரகவி' என்னும் நாடகத்தை எழுதிக் கொடுத்தார். இதுபற்றி ஸுதர்சனத்தில் சர்ச்சை ஏற்பட்ட போது சில கல்வெட்டுகளை ஆதாரமாகக்காட்டினுர். 202 எண்ணுள்ள ஸுதர்சனத்தில் நாம் எழுதியது பின்வருமாறு:

''தாங்கள் காட்டியிருக்கும் கல்வெட்டுக்களில் காணப் படுபவரின் பெயர் மாறன்காரி என்பது, மாறன் என்னும் பெயரிலிருந்து இவர் க்ஷத்ரியர் என விளங்குகிறது. பேரரையன் தமிழ்க் கல்வெட்டும் இவர் க்ஷத்ரியர் என்பதை வலியுறுத்து கிறது. இவர் கரவந்தபுரம் அல்லது களக்குடியில் வாழ்ந்தவர்; வைத்தியர். மதுரகவியாழ்வாரோ திருக்கோளூரில் அவதரித் தவர். பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மண குலத்தில் ஜைமினி ஸாம வேதத்தை ஓதும் பரம்பரையிலே தோன்றியவர். இன்றும் இவருடைய வம்சத்தவர்கள் ஆழ்வார் திருநகரியில் வாழ்கிருர்கள். இவருக்கு மாறன்காரி என்று பெயர் இருந்த தாகவோ, இவர் மூவேந்த மங்கலப் பேரரையர் என்றோ,

கரவந்தபுரம் அல்லது களக்குடியில் இவர் வாழ்ந்ததாகவோ, வைத்தியத் தொழிலை இவர் நடத்தியதாகவோ, அமைச்சராக யிருந்ததாகவோ எந்த நூலும் கூறவில்லை. தங்களால் ஆதார மாக எடுக்கப்பட்ட Dr. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்காரும், நம்மாழ்வார் காலத்தை ஏழாம் நூற்றாண்டுக்குள்ளாகவே அடைக்கவேண்டும் என்று கூறுகிறாரேயொழிய எட்டாம் நூற்றாண்டுக்குக் கொண்டுபோகவில்லை. இவற்றையெல்லாம் நடுநிலைநின்று நோக்கினால் கரவந்தபுரமாறன்காரி மதுரகவி யாழ்வாராயிருக்கவே முடியாது என்று விளங்கும்.

கண்ணிநுண் சிறுத்தாம்பிலுள்ள முக்கியமான ஓர் அகச் சான்றைக் காண்பார்க்கு மதுரகவியாழ்வார் ஓர் அமைச்சராக வும், அரசியல் வாதியாகவும் விளங்கியிருக்கமுடியாது என்பது விளங்கும். "தேவுமற்றறியேன் குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித்திரிவனே" என்று தாம் பரமபுருஷனிடமும் ஈடுபடுவதில்லை என்றும், நம்மாழ்வாரின் பாமாலைகளைப் பாடு வதையே பொழுதுபோக்காகக் கொண்டிருப்பதாகவும் கூறு கிறார் மதுரகவியாழ்வார். இதனாலேயே இவ்வாழ்வாருக்கு மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் சிறந்ததோர் ஸ்தானம் வைஷ்ணவ ஆசார்யர்களால் ஆயிரம் வருஷங்களுக்கு மேலாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இத்தகையவர் நாக்கொண்டு மானிடம்பாடும் அமைச்சராகவும், அரசியல் வாதியாகவும் வாழ்ந்தார் என்று தாங்கள் கற்பனை செய்திருப்பதை வைஷ்ணவ சமூகம் ஏற் காது. மதுரகவி என்னும் பட்டம்பெற்ற மாறன்காரி என்ப வரைப் பற்றிய நாடகம் என்னுமளவோடு *நிறுத்தியிருந்தால்* நன்றாயிருந்திருக்கும்."

இவ்வளவும் ஸ்ரீவேணுகோபாலனுக்கு நாம் எழுதிய பதில். இதிலுள்ள நிரூபணங்களுக்கு ஸ்ரீவேணுகோபாலன் யாதொரு பதிலும் எழுதவில்லை. ஆகையால் செம்பியன் எழுதுவதும் நிராதாரமான கற்பனையே. வெறும் கற்பனையைத் திருப்பித் திருப்பி நாவல்களில் எழுதுவதன்மூலம் உண்மையாக்கிவிட இக்கால நாவலாசிரியர்கள் பலர் முயல்கிறார்கள் என்னும் உண்மைக்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு.

75. "இதயம் பேசுகிறது" (27—6—82) இதழ் தேவி தரிசனக் கட்டுரையில்—மகாலக்ஷ்மி வராகப்பெருமாளின் புறத் தோற்றத்தைப் பரிகசித்ததாகவும், அதனால் கோபம் கொண்ட மகாவிஷ்ணு மகாலக்ஷ்மியை அரூபியாக மாறும்படி சாபமளித்த தாகவும், மகாலக்ஷ்மி காமாட்சி கோயிலில் அரூப லக்ஷ்மியாக இருந்து காமாட்சியருளால் சாபவிமோசனம் பெற்றதாகவும் குறிக்கப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட பொய்க் கதைகளைப் பரப்பு வதால் ஏற்படும் தீமைகளை எடுத்துக்காட்ட வேண்டுகிறேன்.

நம்முடைய வைதிக மதத்திற்கு மூலப்ரமாணம் வேதமே. அந்த வேதத்தை விளக்கவந்தவை ஸ்ரீராமாயணமும், மஹா பாரதமும், புராணங்களும். ஆதிசங்கரர், ராமாநுஜர், மத்வர் முதலிய மதாசார்யர்கள் தமது பாஷ்யங்களில் இவைகளைக் கொண்டே தங்களது ஸித்தாந்தங்களை நிலை நாட்டுகின்றனர். இம் மூவருமே "நாராயணன் ஒருவனே பரம்பொருள். மற்ற எல்லா தெய்வங்களும் அவனால் படைத்து, காத்து, அழிக்கப் படுகின்றனர்" என்று தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர். குறிப்பாக ஆதிசங்கரர் ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஒன்றையே மேற் கோளாகக் காட்டுகிறார். ஸ்தல புராணங்களை எந்த மதா சார்யர்களும் தொட்டது கிடையாது. ஸ்தலபுராணங்கள் ஒவ்வொரு கோயிலிலிருக்கும் தெய்வங்களுக்குப் பெருமை சொல்வதற்காக, மற்ற தெய்வங்களை மிகத்தாழ்வாக இழித் துரைத்து மிகச் சமீபகாலத்தில் இயற்றப்பட்டவை. வேத, இதிஹாச, புராணங்களுக்கு முரணான இக்கதைகளைப் பரப் புவது, நம் மதாசார்யர்களுக்குச் செய்யும் துரோகமாகும். நமது வைதிக மதத்தை ஏற்கனவே தூஷித்து வருபவர்க ளுக்கு இக்கதைகள் மேலும் உதவுவதோடு, வைதிக மதத்தை அழித்தேவிடும்.

S. ஸௌம்யநாராயணன், ஸ்ரீரங்கம்.

76. கல்கி (27—6—82) இதழில் "கலியுகம் ஒன்றும் இல்லையே" என்ற தலைப்பில் "பொலிக பொலிக" எனும் திருவாய்மொழியின் கருத்தைக் கூறவந்த புலவர் கீரன் "சமய வேறுபாடின்றி எந்தத் தெய்வத்தையும் தொழலாம். உள்ளத்து நிறுத்திக்கொள்ளும் தெய்வம் உம்மை உய்யக்கொள்ளும்.

*இதற்கு மார்க்கண்டேயன் சாட்சி." என்று கருத்துரைத் திருக்கிறார். இக்கருத்து நம்மாழ்வார் திருவுள்ளத்துக்குப் பொருந்துமா என்று விளக்கவேண்டுகிறேன்.*

பாசுரத்தை முழுவதும் அச்சிட்டால் பொய்ம்மை வெளிப் பட்டுவிடும் என்றுணர்ந்து, சில பதங்களை விட்டுவிட்டு இங்கு பொய்ப்பொருள் எழுதப்பட்டிருக்கிறது. முழுப் பாசுரம் இதோ! "*நிறுத்தி நும் உள்ளத்துக் கொள்ளும் தெய்வங்கள் உம்மை உய்யக்கொள், மறுத்தும் அவனோடே கண்டீர் மார்க் கண்டேயனும் கரியே, கறுத்த மனமொன்றும் வேண்டா கண்ண னல்லால் தெய்வமில்லை, இறுப்பதெல்லாம் அவன் மூர்த்தியாய் அவர்க்கே இறுமினே*" "*தெய்வங்கள் உம்மை உய்யக்கொள் மறுத்தும் அவனோடே கண்டீர்*" (தேவதைகள் உங்களை உய் விப்பது அந்த எம்பெருமானோடு சென்றடைந்தே கண்டீர்) என்னும் பாசுரத்தில் மறுத்தும் என்னும் பதத்தை மறைத்து விட்டு, பொய்ப்பொருளை எழுதியிருக்கிறார் கீரன், "மறுத்து மவனோடே கண்டீர் மார்க்கண்டேயனும் கரியே" என்ற இக்கருத்தையே வேறொரு இடத்தில் ஆழ்வார் "புக்கடிமை யினால் தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை நக்கபிரானும் அன்றுய்யக்கொண்டது நாராயணனருளே" (திருவாய்மொழி 4-10-8) என்று அருளியுள்ளார். 'கண்ணனல்லால் தெய்வ மில்லை' என்று ஆழ்வார் அழுத்தமாகக் காட்டியிருக்க, 'கண்ணன் தெய்வம்' என்று அழுத்தமில்லாமல் எழுதுகிறார் கீரன். "இறுப்பதெல்லாம்"(நீங்கள் செலுத்துவதையெல்லாம்) என்று ஆழ்வார் அருளியிருப்பதை உணராமல் 'இருப்பதெல் லாம் அவன் மூர்த்தியே' என்று பொருள் எழுதுகிறார் கீரன். வல்லின 'ற' கரத்துக்கும் இடையின 'ர' கரத்துக்கும் வேறு பாட்டைக்கூட அறியமுடியாத இவருடைய புலமைதான் என்னே! 'மற்றைத்தெய்வம் நாடுதிரே" "உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள்", "தேவன் எம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையும் தகுமே" என்று பற்பல இடங்களிலும் நாராயணனுடைய பரத்வத்தை நிலைநாட்டியிருக்கும் நம்மாழ் வார் 'சமய வேறுபாடின்றி எந்த தெய்வத்தையும் தொழலாம்" என்று கூறுவதாக எழுதுவதும், அதை அச்சிடுவதும் மனச் சாட்சியே இல்லாதவர்கள் செய்யும் காரியமே!

[ஞானபூமி ஜூலை 82 இதழில் இந்துக்களிடையே ஒற்றுமையை விளைப்பதற்காகப் பொதுவான ஒரு மந்திரத்தை ஒழுங்கு படுத்தி அமைக்கவேண்டும் என்றும், ஒரு பொது இந்துமத நூலை—அல்லது சில நூல்களைப் பொதுவான புனித மத நூலாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் கருத்து தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதுபற்றிச் சில கேள்விகள்.]

***77. இந்துமதம் ஒரு மதமா? அல்லது பல மதங்களின் கூட்டமா?***

மறுமையில் பேரின்பத்துக்கு வழி காட்டுவது மதமாகும். இன்று "இந்துமதம்" என்று வெளிநாட்டாரால் பேரிடப்பட்ட மதத்தொகுப்பு ஆதிகாலத்தில் "வைதிகமதம்" என்று வழங்கப்பட்டுவந்தது. இந்த வைதிக மதத்துக்கு மூலப்ரமாணமான வேதத்திற்குப் பொருள் உரைப்பதில் கருத்து வேறுபாட்டாலே, ஆதிகாலம் முதல் சங்ககாலம் வரையில் ஒன்றாயிருந்த வைதிகமதம் பிற்காலத்தில் த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்று வேதாந்தக் கொள்கையையிட்டும், சைவம் வைஷ்ணவம் என்று கடவுட்கொள்கையையிட்டும் பலவாகப் பிரிந்தது. இந்த மதங்கள் ஒவ்வொன்றும் மறுமையில் பேரின்பத்துக்கு வெவ்வேறு வழிகளைக்காட்டுகையாலே, வெவ்வேறு மதங்களே ஆகும். ஆகையால் 'இந்து' மதம் என்பது பல மதங்களின் கூட்டமேயொழிய ஒருமதம் அல்ல.

***78. கிறிஸ்துவர்களுக்கு 'பைபிள்' போலவும், இஸ்லாமியர்களுக்கு 'குர்ஆன்' போலவும் இந்துக்களுக்குப் பொதுவான புனித மதநூல் இருக்கிறதா, அல்லது உருவாக்கவேண்டுமா?***

ருக், யஜுஸ், ஸாமம் அதர்வணம் என்று வேதவ்யாஸரால் நான்காகப் பிரிக்கப்பட்ட வேதம் ஆதிகாலத்திலிருந்தே, இன்று 'இந்துக்கள்' என்று அழைக்கப்படுகிறவர்களுக்குப் பொது மதநூலாயிருந்து வருகிறது. ஆகையால் பொதுவாக ஒரு மதநூலை உருவாக்கவேண்டிய அவசியமே இல்லை, அநாதிகாலமாக உள்ள வேதத்தை விலக்கிவிட்டுப் புதிதாக ஒரு மதநூலை உருவாக்குவதற்கு இன்றுள்ள எவருக்கும் தகுதியும் இல்லை. ஒரு சிலர் சேர்ந்து அப்படி ஒரு நூலை

அல்லது நூல்களை உருவாக்கினாலும் அதை இந்துக்கள் அனைவரும் ஏற்கமாட்டார்கள். இந்துக்களுக்கு இன்றுவரையில் உள்ள பலவகையான ப்ரமாண நூல்களோடு இதுவும் ஒரு நூலாக நிற்கும்.

*79. இந்துக்களுக்குப் பொதுவான ஒரு மந்திரம் இருக்கிறதா? அல்லது புதிதாக ஒன்றை அமைக்கவேண்டுமா?*

'ஓங்காரம்' எனப்படும் பிரணவம் இந்துக்கள் அனைவராலும் மூலமந்திரமாகக் கொள்ளப்படுகிறது. ஆகையால் புதிதாக ஓர் மந்திரத்தை அமைக்கவேண்டிய அவசியமில்லை. அமைத்தாலும் அதை அனைவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

*80. சிலர் சேர்ந்து பொதுவான ஒரு மதநூலை அல்லது நூல்களை உருவாக்குவதன்மூலமும், பொதுவான மந்திரத்தை அமைப்பதன்மூலமும் இந்துக்களிடையே ஒற்றுமை உண்டாகிவிடுமா? இல்லாவிடில் ஒற்றுமைக்கு உண்மையான வழி என்ன?*

இந்து சமூகம் கோடிக்கணக்கான மக்களைக்கொண்டது. அதில் மதத்தலைவர்களும் ஆயிரக்கணக்கில் இருக்கின்றனர். இவர்களில் ஒருவர் சொல்லுவதை மற்றவர்கள் இசையமாட்டார்கள் அவ்வளவு கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. ஆகையால் இவர்களில் பத்தெட்டுப்பேர் சேர்ந்து பொது மத நூல்களையும், பொதுமந்திரத்தையும் உருவாக்கினாலும், ஆயிரக்கணக்கான மற்ற மதத்தலைவர்கள் அவற்றை ஏற்கமாட்டார்கள். இதனால் இந்துக்களிடையே ஒற்றுமை விளையாது. அவரவர் தத்தம் மதங்களை உறுதியாகப் பின்பற்றிக்கொண்டு பிற மதங்களிடம் சகிப்புத் தன்மையுடன் இருப்பதொன்றே மதங்களிடையே ஒற்றுமையேற்பட ஒரே வழி. இதையே ஆங்கிலத்தில் "Tolerance" (சகிப்புத்தன்மை) என்பார்கள். வேதங்களையே மூலப்ரமாணமாகக் கொண்ட இந்துக்களின் மதங்களிடையேயும் இதுவே ஒற்றுமைக்கு வழியாகும். வேறு வழிகளைக் கண்டுபிடிக்க முயல்வது வேற்றுமைகளையே வளர்க்கும்.

S. முரளி, அந்தநல்லூர். [81—86 கேள்விகள்]

*81. வால்மீகி ராமாயணத்தில் அகல்யையை அவளது பர்த்தா "பிறர் கண்ணில் படாமல் கிடப்பாயாக" என்று சபித்ததாக உள்ளது. அப்படியிருக்க காளிதாஸாதி கவிகளுடைய காவியங்களிலும் ஆசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளிலும் அகல்யை கல்லாகக் கிடந்ததாகக் கூறுவது எப்படிப் பொருந்தும்?*

"பாத்மபுராணத்தில் 'அஹல்யாக்₂யா ஶிலா ஜஜ்ஞே' என்று இருப்பதையொட்டி, அஹல்யை கல்லாகக் கிடந்தாள் என்று கூறப்படுகிறது. இது வேறொரு கல்பத்தைப் பற்றியதாகை யாலே விரோதமில்லை" என்று ஸ்ரீராமாயண வ்யாக்யாதாவான கோவிந்தராஜர் நிர்வஹித்தார். மற்றொரு வ்யாக்யாதாவான திலகர் "அத்₃ருஶ்யா—ஸ்வரூபத்தோடு காணப்படாதவளாய், சிலாரூபத்தோடு அனைவராலும் காணத்தக்கவளாய் இருந்தாள்" என்று பொருள்கொண்டு முரண்பாடில்லாமையை நிரூபித்தார்.

*82. பரமபதமடைய உத்தராயணம், சுக்லபக்ஷம், பகல் ஆகிய காலங்கள் அவச்யம் என்று கீதையில் கூறியிருப்பதுபோல் உள்ளதே; மற்ற காலத்தில் மரணமடையும் ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பரமபதம் இல்லையா?*

கீதை (8-24) சுலோகத்தின் பாஷ்யத்தில் இங்கு காலசப்தம் மார்க்கத்தைக் காட்டுவது என்று அருளிச்செய்யப்பட்டது. (நமது வியாக்கியானத்தில் இதன் விரிவைக் காணலாம்.) ஆகையால் ஸ்ரீவைஷ்ணவனுக்கு எந்தக் காலத்தில் மரணம் நேர்ந்தாலும் பரமபத ப்ராப்தி உண்டு.

*83. அஷ்டாங்கயோகம் என்பது யாது? நாதமுனி, குருகைக்காவலப்பன் ஆகியவர்கள் அனுஷ்டித்த இது ஸ்வ ப்ரயத்னமாகையாலே தாழ்ந்ததாகாதா?*

பாதஞ்ஜலயோக சூத்திரத்தில் அஷ்டாங்கயோகம் விரிவாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (1) யமம், (2) நியமம் (3) ஆஸனம், (4) ப்ராணாயாமம், (5) ப்ரத்யாஹாரம், (6) த்யானம், (7) தாரணை, (8) ஸமாதி ஆகியவற்றின் லக்ஷணமும் உரைக்கப் பட்டிருக்கிறது. நாதமுனிகளும் குருகைக்காவலப்பனும் இந்த யோகம் கைவந்தவர்கள். ஆனாலும் இதை ஸாதனமாகக்

கொண்டு அவர்கள் மோக்ஷமடையவில்லை. ப்ரபந்நர்களாயிருந்து மோக்ஷமடைந்தவர்களே அவர்கள். நாதமுனிகள் லோக க்ஷேமத்தின் பொருட்டு அஷ்டாங்கயோகத்தாலே நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரித்து அருளிச்செயலைப்பெற்றார். குருகைக்காவலப்பன் இவ்வுலகிலிருக்கும்போது இந்த அஷ்டாங்கயோகத்தைக்கொண்டு பகவதநுபவத்தைப் பெற்றுவந்தார். அதுவும் எம்பெருமானுடைய முகமலர்த்திக்கு உறுப்பான அநுபவமே என்பது ஐதிஹ்யங்களிலிருந்து விளங்குகிறது. ஸ்வார்த்தமான (தன் ஆநந்தத்துக்கு உறுப்பான) ஸ்வப்ரவ்ருத்தியே (தன் முயற்சியே) தாழ்ந்தது. பரார்த்தமான ப்ரவ்ருத்தியே நாதமுனிகளிடமும் அவரது சிஷ்யரிடமும் காணப்பெறுவதால் அது தாழ்ந்ததல்ல.

*84. கூரநாராயண ஜீயருடைய ஸுதர்சனோபாஸனம் ஸ்வப்ரவ்ருத்தியாகையால் தாழ்ந்ததாகாதா?*

அவரும் எம்பெருமானுக்கு வந்த ஆபத்துக்களைத் தவிர்ப்பது, திருவரங்கப்பெருமாள் அரையருக்கு வந்த நோயைப் போக்குவது முதலான பகவத் பாகவத கைங்கர்யங்களுக்கே தமது உபாஸனத்தைப் பயன்படுத்தினராகையாலே இது ஸ்வார்த்தமான ஸ்வப்ரவ்ருத்தி ஆகாது. ஆகையால் இதுவும் தாழ்ந்ததாகாது.

*85 ஸ்ரீவைஷ்ணவன் மரணமானால் வைகுந்தம் அடையும்போது அந்திமக்ரியைகள் எதற்கு? இக்கிரியைகள் பேற்றுக்கு உதவமாட்டாவே*

ஸ்ரீவைஷ்ணவனின் பேற்றுக்கு உதவமாட்டாவாகிலும், செய்கின்ற கர்த்தாவுக்கு பகவதாஜ்ஞையைப் பின்பற்றினன் என்னும் பேறுகிடைக்கிறதாகையாலே இவை அவசியம் செய்ய வேண்டியவையே.

*86 சக்கரவர்த்தித்திருமகன் ராவணவதத்துக்காக ஆதித்யனை ஆதித்யஹ்ருதயத்தால் உபாஸித்தான் என்பது உண்மையா?*

ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் 107வது ஸர்க்கத்தில் ஆதித்யஹ்ருதயஸ்தோத்ரம் உள்ளது. அந்த ஸர்க்க வ்யாக்

யானத்தின் முடிவில் கோவிந்தராஜர் இதுபற்றி விசாரித்திருக்கிருர். தனக்கு முந்திய வ்யாக்யான கர்த்தாவான உடாரி எங்கும் இந்த ஸர்க்கத்தை வ்யாக்யானம் செய்யவில்லை என்பதையும், யுத்தகாண்டத்தில் 130 ஸர்க்கங்களே உள்ளன என்று அவர் கணக்கிட்டிருப்பதையும், இந்த ஸர்க்கத்தையும் சேர்த்தால் 131 ஸர்க்கங்களாகின்றன என்பதையும் எடுத்துக்காட்டி இந்த ஸர்க்கம் ப்ரக்ஷிப்தமே (இடைச்செருகலே) என்று நிர்ணயித்திருக்கிருர். இதில் ஆதித்யனுக்குச் சொல்லப்படும் பெருமைகள் அவனுக்கு அந்தர்யாமியான ஸூர்யநாராயணனையேசேரும் என்று வ்யாக்யானமும் செய்திருக்கிருர். ராமன் மனிதனுகப் பிறந்தமைக்குச் சேர, தன் பரத்வத்தை மறைப்பதற்காக ராவணவதத்தின் பொருட்டு அகஸ்த்யரிடமிருந்து இந்த ஸ்தோத்திரத்தை உபதேசம் பெற்ருன என்று கொள்ளலாம் என்றும் உணர்த்தியிருக்கிருர்.

*திருவாலி, கிருஷ்ணஸ்வாமி, சென்னை-34.*

*87. செப்டம்பர் 'ஞானபூமி'யில் வெளிவந்துள்ள ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமிகளின் பேட்டியில் (1) "நானும் (ஜீயர் ஸ்வாமியும்) தருமபுரம் ஆதீனகர்த்தரும் பரஸ்பரம் நமஸ்காரம் செய்து கொள்வது வழக்கம்" (2) சிவபெருமான் காப்பாற்றவும் வருவார். விக்னமில்லாமல் கார்யம் நடக்க விநாயகர், கல்விக்கு ஸரஸ்வதி, செல்வத்துக்கு லக்ஷ்மி தேவி என்றெல்லாம் வைத்துக் கொண்டிருக்கிறோம் தேவைக்கேற்பப் பூசையும் நடக்கிறது......" என்றெல்லாம் ஜீயர்ஸ்வாமி கூறியதாக வெளிவந்துள்ளது. இவை ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்துக்குப் பொருந்துமா ?*

'இவை நம் ஸம்ப்ரதாயக் கொள்கைகளுக்கு முற்றிலும் விருத்தமானவை. ஆனல் ஜீயர் ஸ்வாமி இப்படியெல்லாம் பேட்டியில் அருளிச்செய்திருப்பாரா என்பது சந்தேகமே. (ஜீயர்ஸ்வாமி தற்போது வடநாட்டு யாத்திரையிலிருப்பதால் இதன் உண்மைபற்றி அவரைக் கேட்கமுடியவில்லை.) ஞானபூமியில் தவருன தகவல்கள் பிரசுரிக்கப்படுகின்றன.

'ஞானபூமி' ஜூலை இதழில் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி பேட்டி வெளியிடப்பட்டிருந்தது அதில் பல தவருன தகவல்கள்

—அதாவது ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமி கூருத கருத்துக்கள் இடம் பெற்றிருந்தன. அவற்றைச் சுட்டிக்காட்டி, திருத்தம் வெளியிடும்படி ஞானபூமிக்கு எழுதியதாகவும், அதற்கு யாதொரு பதிலுமில்லை, திருத்தமும் வெளியிடப்படவில்லை யென்றும் ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ரிகாசிரியர் நம்மிடம் தெரிவித்தார்.

அக்டோபர் ஞானபூமியில் கௌடியாமடத் தலைவர் ஸ்ரீபக்திப்ரஜ்ஞான யதிமகராஜ் அவர்களுடைய பேட்டி இடம் பெற்றிருந்தது. அதில் "சைவம், வைணவம் இரண்டுமே இந்துமதத்தின் இரண்டு முக்கியமான பிரிவுகள். ஆனால் இவை புராண காலங்களில் ஏற்பட்டவைதான். உபநிஷத்காலங்களில் பகவானைக் கண்கூடாகக் கண்ட ரிஷிகள் இப்படிப் பிரித்துக் கூறவில்லை......

சிவனை அறியாதவர்கள் நாராயணனை அணுகமுடியாது என்ற தத்துவமே இருக்கிறது. ஆகவே இப்படிப் பிரிப்பதோ, ஏற்றத்தாழ்வு கற்பிப்பதோ முறையல்ல. இதனால் நம்முடைய மதத்தின் பலமே பிளவுபட்டுப்போகும் என்று கூறியதாக வெளியிடப்பட்டிருந்தது. உண்மையிலேயே யதிமகராஜ் இப்படிக் கூறியிருந்தாரா என்று அறிந்துகொள்ள இதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அவருக்கு அனுப்பினோம். கல்கத்தா சென்றிருந்த அவர் 11—10—82அன்று நமக்குக் கடிதம் எழுதினர். "நான் அப்படிப் பதிலளிக்கவேயில்லை. எனது வாழ்க்கைக் குறிக்கோளையே ஞானபூமி தாறுமாறாக்கி விட்டது என்று உணரும்போது எனது ரத்தம் கொதிக்கிறது. நான் சென்னை திரும்பியதும் ஞானபூமிக்குக் கடுமையான பதில் எழுதப்போகிறேன்" என்று எழுதியிருக்கிறர். மேலும் கௌடிய மடத்திலிருந்து வெளிவரும் பத்திரிகையிலும் ஞான பூமி பேட்டியில் கண்டுள்ள விஷயங்கள் தங்கள் அடிப்படைக் கொள்கைக்கு முரணனவை என்று குறிப்பு வெளியிட்டுள்ளனர். இப்படி பேட்டிகளைத் திரித்து வெளியிடுவதிலிருந்து ஸ்ரீஜீயர் ஸ்வாமி பேட்டியும் திரித்தே வெளியிடப்பட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது.

S. முரளி, அந்தநல்லூர்.

*88. இதயம் பத்திரிகையில் வெளிவரும் நிலாமுற்றம் எனும் சரித்திர நாவலில் "கணிகண்ணன் எனும் வைஷ்ணவர் துஷ்பிரசாரங்கள் செய்து சமயப்பூசல்களைத் தூண்டி வருகிருர்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் உண்மை உள்ளதா?*

கணிகண்ணர் என்பவர் திருமழிசை ஆழ்வாரின் சீடர். இவர் சமயப்பூசல்களில் ஈடுபட்டதாக எந்த வரலாற்று நூலிலும் ஆதாரம் இல்லை. இப்படி ஆதாரமில்லாமல் எழுது பவர்கள்தான் வைஷ்ணவ துவேஷப்ரசாரம் செய்து சமயப் பூசல்களை வளர்க்கிருர்கள். ஜகச்சிற்பியனின் திருச்சிற்றம் பலம், கண்ணதாசனின் சேரமான்காதலி, மு மேத்தாவின் சோழநிலா முதலிய பிற நாவல்களில் வைஷ்ணவ துவேஷப் பிரசாரம் வெளிப்படையாகவே செய்யப்பட்டிருக்கிறது. இவற்றிற்கு இவர்கள் ஆதாரம் காட்டுவதுமில்லை. ஆதாரத் தோடு இவைகளை நாம் மறுத்து எழுதினுலும் பிரசுரிப்பதில்லை. இந்த துவேஷப்பிரசாரங்களை நிறுத்தினுலொழிய இந்துக்க ளிடையே ஒற்றுமை ஏற்படப்போவதில்லை.

M. ராஜகோபாலன், பெங்களூர்.

*89. பகவான் ஸர்வாந்தர்யாமி என்றும், அவன் உள் நுழைந்து வியாபிக்காத இடமில்லை என்றும் நாம் ஒப்புக் கொள்ளுகிருேம். மலம், மூத்திரம் முதலான மிகத் தாழ்ந்த பொருள்களில் அவன் வியாபித்திருந்தால் அவற்றின் தோஷம் அவனுக்கு ஏருதா?*

உபயலிங்காதிகரணத்தில் [ப்ரஹ்மஸூத்ரம் 3-2-5] வேத வ்யாஸரால் இவ்விஷயத்துக்கு மிகத் தெளிவாகப் பதில் உரைக் கப்பட்டது. அவ்வதிகரணத்தின் ஸ்ரீபாஷ்யத்தின் ஸாரத்தை நமது சாரீரககாரிகாவளீ விவரணத்திலிருந்து உணரலாம். சுருக்கமாக ஒன்று கூறுகிறேம். மலம் மூத்திரம் முதலான தாழ்ந்த பொருள்களில் உள்ள தோஷங்கள் ஆகாயத்தின்மேல் ஏறுவதில்லை என்பதை நாம் பிரத்யக்ஷமாகப் பார்க்கிருேம். ஸூக்ஷ்மமான ஆகாசத்துக்கே இந்தப் பெருமை இருக்கும் போது அதற்கும் அந்தர்யாமியாய், அதிஸூக்ஷ்மமானவனுன பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் சேதனுசேதனங்களின் தோஷங்கள் ஏறுவதில்லை என்றுல் அதில் ஐயமுற இடமுண்டோ?

வ. கோ. ஸ்ரீதரசர்மன், திருச்சி. [90, 91]

*90. வைணவமதத்திற்குள் தற்பொழுது நிலவும் பிரிவுகள் எப்படி நேர்ந்தன? எவர்காலத்தில் இவை பிரிந்தன? இவற்றில் வேறுபாடுகள் என்ன?*

நமது "சங்ககாலத் தமிழர் சமயம்" காட்டியபடி வைஷ்ணவமதமே மிகப்பழைய காலத்தில் வைதிகமதமாகத் திகழ்ந்துவந்தது. பிற்காலத்தில் வேதவாக்கியங்களுக்குப் பொருள் உரைப்பதில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டதால் வைஷ்ணவமதம்—அத்வைதம் விசிஷ்டாத்வைதம் த்வைதம் என்னும் மூன்று பிரிவுகளாகப் பிரிந்தது. ஆதிசங்கரருடைய பாஷ்யங்களையும் அவரது சிஷ்யப்ரசிஷ்யர்களுடைய நூல்களையும் பார்க்கும்போது ஆயிரம் வருஷங்களுக்குமுன் வரையில் அத்வைதிகள் வைஷ்ணவர்களாகவே இருந்தனர் என்று விளங்குகிறது. பிற்காலத்தில் விசிஷ்டாத்வைதி த்வைதிகளிடம் விரோதத்தால், அத்வைதிகளில் பெரும்பாலானவர்கள் சாக்த சைவர்களாக மாறினபோதிலும், இன்றும் வேறு தெய்வங்களைத் தொழாத பரம வைஷ்ணவர்களாகப் பல அத்வைதிகள் இருப்பது மறுக்கவொண்ணாதது. ஆழ்வார்கள் வழிவந்த விசிஷ்டாத்வைதிகளும், மாத்வர்களும் (இவர்களின் வழிவந்த) வடநாட்டு வைஷ்ணவர்களான சைதன்ய வல்லபமதஸ்த்தர் முதலானாரும் விஷ்ணுபரத்வத்தை ஒப்புக்கொள்ளும் வைஷ்ணவர்களாகவே விளங்கிவருகிறார்கள். சித் அசித் ஈச்வரர்களுடைய ஸ்வரூபஸ்வபாவங்களைப்பற்றிய வேத வேதாந்த விசாரத்திலேயே இவர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவர்களிடையே ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் தென்கலை, வடகலை என்னும் பிரிவுகள் ஏற்பட்டு விட்டன ஸ்ரீவேதாந்ததேசிகர் விஷ்ணுபரத்வம் சரீராத்மபாவம் முதலான முக்கியமான கொள்கைகள் தவிர்த்த மற்றும் சில ரஹஸ்யக் கொள்கைகளில் மற்ற ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களோடு சில கருத்து வேற்றுமைகளைத் தமது நூல்களில் தெரிவித்திருந்தார். அவற்றை அடிப்படையாகக்கொண்டு பிற்காலத்தில் புண்ட்ரபேதம், அனுஷ்டானபேதம் முதலானவற்றுடன் வடகலைப்பிரிவு வகுப்பட்டது. மற்ற பூர்வாசாரியர்களின் கொள்கைகளைப் பின்பற்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் தென்கலை என்னும் பிரிவாகத் திகழ்கின்றனர்.

*91. ப்ரம்மோபதேசம், ஸமாச்ரயணம், பரந்யாஸம் என்ருல் என்ன? எதற்காக வைணவர்கள் இவைகளைச் செய்து கொள்ளவேண்டும்?*

ப்ரஹ்மோபதேசம் என்பது உபநயனத்தின்போது ப்ராஹ்மணர்கள் அனைவரும் பெறும் காயத்ரியின் உபதேசமாகும். ப்ராஹ்மண்யஸித்திக்கு இது அவசியமாகிறது. ஸமாச்ரயணம் என்பது வைஷ்ணவத்வஸித்திக்காக ஸ்ரீவைஷ்ணவர்கள் பெறும் பஞ்சஸம்ஸ்காரங்களைக் குறிக்கிறது. ஸ்ரீராமாநுஜருடைய திருவடி ஸம்பந்தமுடைய ஆசார்யனிடமிருந்து (1) தோள்களில் சங்கசக்கரமுத்ராதாரணம், (2) பன்னிருதிருமண் காப்புகளை அணிதல், (3) பகவத் பாகவத ஸம்பந்தத்தைக் காட்டும் தாஸ்ய நாமத்தைப் பெறுதல், (4) ரஹஸ்யத்ரய மந்த்ரங்களை உபதேசம் பெறுதல், (5) எம்பெருமானை ஆராதிக்கும் முறையை உபதேசம் பெறுதல் என்பவையே பஞ்சஸம்ஸ்காரங்களாகும். இவற்றில் ரஹஸ்யத்ரயத்தில் த்வய மந்த்ரத்தை உபதேசம் பெறும்போதே ஸ்ரீவைஷ்ணவன் ப்ரபந்நன் *(சரணுகதன்)* ஆகிவிடுகிருன் என்பது தென்கலையார் கருத்து. பரந்யாஸம் எனும் சரணுகதியைத் தனியாக அநுஷ்டிக்க வேண்டும் என்பது வடகலையாரின் கருத்து.

ஸ்ரீமால்பரத்துவ மதுரகவி நா. மருதைப்பிள்ளை,
ஆரம்பட்டி, திருச்சி ஜில்லா. [92—94] கேள்விகள்

*92. சைவர்களுக்கு ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்கள் உண்டா? இல்லையா? இல்லை என்ருல் அதன் காரணம் என்ன?*

சாஸ்த்ரங்கள் கடல்போலே பரந்திருப்பதால் *(1)* உபநிஷத்துக்கள், (2) ப்ரஹ்மஸூத்ரம், (3) பகவத்கீதை என்கிற மூன்று சாஸ்த்ரங்களை வைதிகர்கள் முக்கியமானவையாகக் கொண்டு அவற்றுக்கு பாஷ்யம் இடுவதன்மூலம் தங்கள் தங்கள் மதத்தை நிலைநிறுத்த முயன்ருர்கள். இவற்றில் உபநிஷத்துக்களையும் ப்ரஹ்மஸூத்ரங்களையும் கற்று விளக்கம் எழுத வேதமோதிய அந்தணர்களுக்கே அதிகாரமுண்டு. கீதையும் உபநிஷத்தாகக் கருதப்பட்டதால் முற்காலத்தில் அதற்கு விளக்கம் எழுதிய நூற்றுக்கணக்கான மதத்தலைவர்கள்

அந்தணர்களாகவே அமைந்தனர். இப்மூன்று சாஸ்த்ரங்களும் 'ப்ரஸ்தானத்ரயம்' என்று வைதிகர்களால் கொண்டாடப் பெற்று அந்தணர்களான வைதிகமதத் தலைவர்களால் தத்தம் மதங்களுக்குத் தக்கவாறு விளக்கமும் எழுதப்பெற்றது. சைவத்தில் இந்த ப்ரஸ்தானத்ரயத்தைக் காட்டிலும் சைவாக மங்களுக்கும் சைவபுராணங்களுக்குமே முக்கியத்துவம் கொடுக் கப்பட்டது. இதற்குக்காரணம் சைவமதத் தலைவர்கள் பெரும்பாலும் அந்தணரல்லாதவர்களாக அமைந்ததேயாகும். வேதமோதாததால் இவர்களுக்கு ப்ரஸ்தானத்ரயத்துக்கு பாஷ்யமெழுதத் தகுதியுமில்லை. உபநிஷத் ப்ரஹ்மஸூத்ர கீதை களுக்கு முரணான சிவபரத்வவாதம், "உலகிற்கு நிமித்தகாரண மும் உபாதானகாரணமும் வேறு" என்பது முதலான கொள்கை களைக் கொண்டிருந்ததாலும் இவர்கள் ப்ரஸ்தானத்ரயத்துக்கு பாஷ்யம் எழுதத் துணியவில்லை. ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தைக் காப்பியடித்து எழுதப்பட்ட ஸ்ரீகண்டபாஷ்யம் அப்பயதீக்ஷிதர் காலத்தில் இக்குறையை நீக்குவதற்காகக் கற்பிக்கப்பட்டது. அதற்கு வ்யாக்யானமெழுதிய அப்பயதீக்ஷிதர் ஓர் அத்வைதி. இன்றும் அத்வைதிகளைத் தவிர சைவஸித்தாந்திகள் எவரும் அந்த பாஷ்யத்தைக் கையாள்வதில்லை.

*93. ஆழ்வார்கள் அருளிய திவ்யப்ரபந்தங்களுக்கு வட மொழியிலும் தமிழிலும் தனியன்களும் வ்யாக்யானங்களும் அமைந்ததுபோல் நாயன்மார்கள் இயற்றிய தேவாரம் திருவாசகம் முதலான நூல்களுக்கு அமைந்ததுண்டா?*

ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் வேதத்தையொட்டி அமைந்தவை. தேவாரம் முதலானவை ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ ஸாத்விகபுராணங்களுக்கு முரணான சிவபரத்வ வாதம், விஷ்ணுவை இகழ்ந்துரைத்தல் முதலான கொள்கை களைக் கைக்கொண்டு எழுதப்பெற்றவை. அதனாலேயே நாதமுனிகள் காலந்தொடங்கி நூற்றுக்கணக்கான வைதிகோத் தமர்களான பூர்வாசார்யர்கள் திவ்யப்ரபந்தங்களுக்குத் தனியன் களையுமிட்டு வேதாந்தார்த்தத்தையே அவை சொல்லுகின்றன என்று விளங்கும்படியாக வ்யாக்யானங்களுமிட்டுப் பிரசாரமும் செய்துவந்தனர். வேதங்களுக்கு முரண்பட்ட கொள்கைகளைப்

பேசிய தேவாரம் திருவாசகம் முதலானவற்றைப் பண்டைக் காலத்தில் வேதமறிந்த அந்தணர் ஒதுக்கியே வைத்தனர். அந்தணரல்லாத ஓதுவார்களே அன்று முதல் இன்றுவரை இவற்றைக் கைக்கொண்டு சிவன்கோவில்களில் பாடிவரு கின்றனர். இக்காலத்தில் தேவாரம் முதலானவற்றோடு புது உறவு கொண்டாடத் தொடங்கியிருக்கும் காமகோடி பீடாதிபதிகளும் தமது மடத்தில் வடமொழி நூல்களைப் பாராயணம் செய்கிறார்களே தவிர, தேவாரம் முதலானவற்றைப் பாடுவதில்லை என்பது குறிக்கொள்ளத்தக்கது.

*94. அருளிச்செயல்களுக்கு ஸ்ரீவைஷ்ணவ பூர்வாசாரியர்கள் வேதஸாம்யம் கொடுத்திருப்பதுபோல் தேவாரம் முதலானவற்றுக்கு சைவர்கள் வேதஸாம்யம் கொடுத்திருக்கிறார்களா? இல்லை என்றால் காரணம் என்ன?*

வேதத்தையொட்டிப் பேசுகையாலே ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்யப்ரபந்தத்துக்கு வேதஸாம்யம் கொடுத்தார்கள். வேதத்துக்கு அநத்யயன காலம் ஏற்பட்டிருப்பதுபோல் திவ்ய ப்ரபந்தங்களையும் ஓதாதிருக்கவேண்டிய அநத்யயந காலம் பூர்வாசார்யர்களாலேயே நிர்ணயிக்கப்பட்டது. வேதமறிந்த அந்தணர்களே திவ்யப்ரபந்தங்களை ஓதும் அத்யாபகர்களாக நியமிக்கப்பெற்றனர். வேதத்துக்கு முரணாகப்பேசுகையாலே தேவாரம் முதலானவற்றுக்கு இப்பெருமைகள் எதையும் வைதிகர்கள் அளிக்கவில்லை. நம்மாழ்வார் "வேதம் தமிழ் செய்த மாறன்" என்று புகழப்படுவதுபோல் எந்த நாயன் மாரும் புகழப்படுவதில்லை. நம்மாழ்வாருடைய நாலு ப்ரபந் தங்கள் நாலுவேதஸாரம் என்று கொண்டாடப்படுவதுபோல் நாயன்மார்களின் எந்த நூலும் கொண்டாடப்படுவதில்லை. வேதமறிந்த ப்ராஹ்மணோத்தமர்கள் தேவாரம், திருவாசகம் முதலானவற்றை ஓத முன்வராததால் இன்றும் அந்தணரல்லாதாரே தேவாரம் முதலானவற்றை ஓதிவருகிறார்கள். "திவ்யப்ரபந்தங்களுக்கு ஏற்பட்ட எல்லாப் பெருமைகளும் அவை வேதத்தையொட்டிப் பேசுகின்றதாலேயே ஏற்பட்டவை. வேதத்தை வெட்டிப்பேசும் தேவாரம் முதலானவற்றுக்கு இப்பெருமைகள் ஏற்படவில்லை" என்பது பதிலின் ஸாரமாகும்.

நாயன்மார்களும் தாங்கள் வேதத்தைப் பிரமாணமாகக்கொள்வதாக, தேவாரம் முதலானவற்றில் ஆங்காங்கு குறிப்பிடுகிறார்களேயெனில், அவர்கள் அப்படிக் குறிப்பிட்டாலும், ஆழ்வார்கள் நாயன்மார்களுக்கு முற்பட்டவர்களான சங்க காலச் சான்றோர்கள் பரிபாடல் முதலானவற்றில் 'ஸ்ரீமந் நாராயண பரத்வமே வேதத்தின் கொள்கை' என்று முழங்கியிருப்பதைக் காணும்போது நாயன்மார்கள் வேதத்தை வெட்டிப்பேசியவர்களே என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

V. ஸ்ரீநிவாஸன், ஸ்ரீரங்கம்.

*95. மார்ச் '83 ஞானபூமியில் "ஸ்ரீகிருஷ்ண பிடாரன்" என்னும் தலைப்பில் உள்ள கட்டுரையில் "கண்ணன் பிறந்தவுடன் வஸுதேவர் குழந்தை கண்ணனைத் திருவாய்ப்பாடிக்குத் தூக்கிச் செல்லும்போது குடை பிடித்துச்சென்ற பாம்பு ஆதிசேஷனல்ல; ஆதிசேஷனாய் இருக்கவும் முடியாது. ஏனெனில் ஆதிசேஷன் ஏற்கனவே கண்ணனின் அண்ணன் பலராமராக அவதாரம் செய்திருந்தார். அப்படியானால் குடைபிடித்த அந்தப் பாம்பு யார்? அது காளிங்கன்" என்று தொடங்கி ஒரு கதையும் எழுதப்பட்டுள்ளது. இது உண்மையா?*

இது முழுப்பொய். தாம் எழுதியிருப்பதற்கு இக்கட்டுரை ஆசிரியர் யாதொரு ஆதாரத்தையும் காட்டவில்லை. ஸ்ரீமத் பாகவதம் தசமஸ்கந்தத்தில் ஸ்ரீசுகப்ரஹ்மரிஷி "*சேஷோங்வகாத் வாரி நிவாரயந் பணை:*" [10-4-49] [மழைநீரைத் தன் படங்களினால் தடுத்துக்கொண்டு ஆதிசேஷன் பின் தொடர்ந்தான்] என்று மிகத் தெளிவாக ஆதிசேஷன் குடைபிடித்துச் சென்றதைக் காட்டியுள்ளார். 'ஆதிசேஷன் போன்றவர்கள் ஒரே சமயத்தில் பல உருவங்களை எடுக்கக் கூடியவர்கள்' என்பதைக்கூடக் கட்டுரையாளர் உணரவில்லை.

R. நந்தகுமார், சென்னை-80 (96-99 கேள்விகள்)

*96. 'ஞானபூமி' மார்ச் இதழில் குன்றக்குடி அடிகளாரின் பேட்டியை விமர்சிக்கவும்.*

"சைவம் வைணவம் முதலான மதங்களை ஒன்று படுத்த முடியாது" என்பதை அடிகளார் மிகத்தெளிவாகக் காட்டியுள்ளார். இதில் உள்ள நேர்மையும், நடுநிலைமையும் "ஆலயங்களில் அனைத்துச்சாதியினரும் அர்ச்சகர்களாகவேண்டும்" என்று அவர் வாதிடும்போது காணப்படவில்லை. அவருடைய வாதங்கள் விஷ்ணுகோவில்களுக்கு அடியோடு பொருந்தாது. "திருக்குறளை இந்துமதத்தின் பொதுநூலாக ஏற்றுக்கொள்ளலாம்" என்று அடிகளார் கருத்துக் கூறியுள்ளார். திருக்குறளில் அறம், பொருள், இன்பமாகிய மூன்றைப் பற்றிப் பேசியிருக்கிறதே தவிர மதத்துக்கு உயிரான வீட்டைப்பற்றியும் அதை அடையும் வழிகள் பற்றியும் பேசவே இல்லை. ஆகவே திருக்குறள் நீதி நூலாக முடியுமே தவிர மதநூலாக முடியாது. 'நமது மதத்துக்கு மூலாதாரம் வேதமே' என்பது அனைவரும் அறிந்தது. இதை மறந்தும் மறைத்தும் பேசுவதும், "வைதிகமதம்" என்று அழைக்கவேண்டிய நமது மதத்தை "இந்துமதம்" என்று அழைப்பதும் முறையற்ற செயலாகும்.

*97. 'ஞானபூமி' ஜை இதழில் வானமாமலை ஜீயர் ஸ்வாமி "வடகலைவழி ஆக்ஞாஸம்ப்ரதாயத்தையும், தென்கலை அநுக்ஞா கைங்கர்யத்தையும் பின்பற்றி நிற்பவை. லட்சுமணன், பரதன் நிலை போன்றவை. இவற்றில் தராதரம் பார்க்க முடியாது" என்று சாதித்திருப்பதை விளக்கவும்.*

ஆஜ்ஞா - அநுஜ்ஞாகைங்கர்யங்களுக்கும், வடகலை-தென்கலை ஸம்ப்ரதாயங்களுக்கும் எந்த ஒற்றுமையும் காணப்படவில்லை. "தான் முக்தி அடைவதற்குத் தன் முயற்சியும் வேண்டும்" என்பது வடகலை ஸம்ப்ரதாயம். "தன் நன்மைக்குத் தன் முயற்சி கூடவே கூடாது" என்பது தென்கலை ஸம்ப்ரதாயம். மற்றும் பல பேதங்களும் உள்ளன. 'மதஸம்ப்ரதாயங்களிடையே பேதங்கள் இருந்தாலும் ஒற்றுமையாயிருக்கவேண்டும்' என்பது நியாயம். 'பேதங்களே இல்லை' என்பது எப்படிப் பொருந்தும்? "ஒரு சாரார் (வடகலையினர்) ராமாநுஜர் தனியன்களையும் மற்றொருவர் (தென்கலையார்) மணவாள மாமுனிகள் தனியன்களையும் கூறி வழிபட்டுக் கொண்டிருக்கிறார்கள்" என்று ஜீயர் ஸ்வாமி ஸாதித்ததாக

உள்ளது. ராமாநுஜர் தனியன்கள் இருசாராருக்கும் பொது. ஆகவே "ராமாநுஜர்" என்பதற்குப் பதிலாக "வேதாந்த தேசிகர்" என்று இருக்கவேண்டும். இப்படித் தவருன விஷயங்களை ஜீயர் ஸ்வாமி கூறியிருக்கமாட்டார்.

*98. ஷை ஞானபூமியில் "அருள் உள்ளங்கொண்ட அப்பய்ய தீக்ஷிதர்" என்ற கட்டுரையில் "கௌதம நீலாம்பரன்" அப்பய்ய தீக்ஷிதரை வானளாவப் புகழ்ந்தும் தாதாச்சாரியரை இகழ்ந்தும் எழுதியுள்ளவை உண்மையா?*

"கௌதம நீலாம்பரன்" கற்பனைக்கதைகளை எழுதுபவர். தமது கற்பனை வளத்தைக்கொண்டு பௌராணிக ரீதியில் இக்கட்டுரையில் பொய்க்கதைகளை எழுதியுள்ளார். அப்பய்ய தீக்ஷிதரின் நூல்களைக்கொண்டு பார்க்கும்போது ஓரிடத்தில் சிவபரத்வ வாதமும், மற்றேரிடத்தில் த்ரிமூர்த்திஸாம்யவாதமும், வேறெரிடத்தில் த்ரிமூர்த்தி ஐக்யவாதமும், பிறிதோரிடத்தில் மும்மூர்த்திகளைக் காட்டிலும் மேலானதொன்றே பரம்பொருள் என்னும் உத்தீர்ண வாதமும் செய்வதைக் காண்கிறேம். இதிலிருந்து 'இவர் நிலையான மதக்கொள்கை இல்லாதவர். தற்கால அரசியல்வாதிகளைப் போன்றவர்' என விளங்குகிறது. சிவபரத்வவாதம், ஸாம்யவாதம், உத்தீர்ணவாதம், சக்திவாதம் முதலான ஒன்றுக்கொன்று முரண்பட்ட வாதங்களை மனம்போனபடி செய்பவர்களாய், பரமவைஷ்ணவராயிருந்த ஆதிசங்கரருக்கு துரோகிகளாய் இக்கால அத்வைதிகள் மாறுவதற்கு அப்பய்யதீக்ஷிதரே வழிவகுத்தவராகையால், அவரைப் பற்றி 'கௌதம நீலாம்பரன்' போன்றவர்கள் கதைகள் எழுதிப் புகழ்வதில் வியப்பில்லை.

*99. ஷை ஞானபூமி கடைசி பக்கத்தில் 'சாம்பமூர்த்தி குருக்கள்' எழுதியிருப்பதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

தமக்கு ஸம்ஸ்கிருதம் தெரியும் என்று பிறர் நினைத்துக் கொள்வதற்காகச் சில ஸம்ஸ்கிருத ப்ரமாணங்களைத் தப்பும் தவறுமாக மேற்கோள் காட்டி அவப்பொருள் கூறுகிருர் குருக்கள். சிவன், காளி முதலான சிவகுடும்பத்தைச் சேர்ந்த தெய்வங்களின் கோவில்களில் பலசாதியைச் சேர்ந்தவர்கள்

அர்ச்சகர்களாக இருப்பதைக் காட்டுகிறார். இதே காரணம் சொல்லித்தான் குருக்கள்களை நீக்கிவிட்டு அரிசனங்களை நிய மிக்கவேண்டும் என்கிறது அரசு. சாம்பமூர்த்தி குருக்களைப் போன்றவர்கள் அதற்கு வழிசெய்து விரைவிலேயே கோவில்களி லிருந்து விலகிக்கொள்வார்கள் என்று எதிர்பார்ப்போமாக! உலகில் பிறந்த அத்தனை மனிதர்களும் ஒரே பிரம்மத்தின் பல உருவங்கள்தான். அவர்களிடையே எந்த வேற்றுமையும் கிடையாது'' என்கிற அவரது சொல்லுக்குப் பொருத்தமாகச் செயலும் இருக்கவேண்டுமன்றோ.

A. முகுந்தராமாநுஜம், மாறம்பட்டி.

*100. எம்பெருமானுக்கும் நமக்கும் பிதாபுத்ரஸம்பந்தமும், பர்த்ருபார்யாஸம்பந்தமும் இருப்பதாக ரஹஸ்ய நூல்கள் கூறு கின்றன. பிதாவாக இருக்கும் எம்பெருமான் எப்படி பர்த்தா வாகவும் இருக்கமுடியும் ?*

ரஹஸ்ய நூல்களில் சொல்லப்படும் நவவிதஸம்பந்தங்கள் ப்ராக்ருதமான தொடர்புகளல்ல. 'எம்பெருமான் பிதா, நாம் அவனுக்குப் புத்ரர்கள்' என்றால், உலகில் காணும் பிதாவைப் போலே மாதாவோடு உடலுறவு கொண்டு புத்ரனைப் பெற் றெடுத்தவன் என்று பொருளல்ல. உலகில் உள்ள பிதா புத்ர ஸம்பந்தத்தின் ஸாரமான 'உத்பாதக உத்பாத்யபாவம்' எம் பெருமானுக்கும் நமக்கும் உண்டு என்பதே கருத்து. மாதா பிதாக்களைக் கருவியாகக்கொண்டு நம்மைப் பிறக்கச்செய்தவன் எம்பெருமானேயாகையால் அவனே நம்மை உண்டாக்கின இயற்கைத் தந்தையாகிறான். நாம் அவனால் உண்டாக்கப்பட்ட மக்களாகிறோம். பர்த்ருபார்யாஸம்பந்தத்திலும் ஸாரமான 'போக்த்ருபோக்யபாவம்' எம்பெருமானுக்கும் நமக்குமுண்டு. பர்த்தாவைப்போலே எம்பெருமான் நம்மை அனுபவிக்கிறான். பார்யையைப்போலே நாம் அவனால் அனுபவிக்கப்படும் பொருளாகிறோம். 'உலகிற்காணும் பர்த்தாவின் அனுபவம் ப்ராக்ருதமானது; எம்பெருமானது அனுபவம் அப்ராக்ருத மானது' என்பதே வேறுபாடு. ஆகையால் பிதாவான எம்பெருமான் பர்த்தாவாகவும் இருக்கத் தடையில்லை.

ஸுதர்சனர் பதில்

ஆறுவது சதகம் நிறைவடைந்தது.

# ஸுதர்சனர் பதில்கள்

பத்திரிகைகளில் வரும் கேள்வி பதில்களில் ஸுதர்சனர் பதில்கள் தனித்தன்மை பெற்றவை. மற்ற பத்திரிகை களிற்போல் போதுபோக்குக்காக உலகவிஷயங்களைப்பற்றி யல்லாமல், ஆத்மாவின் உய்விற்கு உறுப்பான மதத்துறை விஷயங்களைப்பற்றி ஆதாரத்தோடு விளக்குகிறவை இவை. அறிவுக்கு விருந்தான அரும்பொக்கிஷமாயிருப்பவை இவை. மதத்துறையில் புகுந்துள்ள பல போலிகளை தாக்ஷிண்ய மில்லாமல் அடையாளங்காட்டி, உண்மையை எதிரிகளும் மெச்சும்படி நிலைநாட்டுகிறவை இவை. இதுவரையில் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" எனும் மாதப்பத்திரிகையில் ஐந்து சதகங்கள் (ஐந்நூறு கேள்விகளுக்கு பதில்கள்) வெளி வந்துள்ளன. ஆருவது சதகமான இது சென்னையிலிருந்து வெளிவரும் "கீதாசார்யன்" எனும் ஸ்ரீவைஷ்ணவ மாதப் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளிவந்தது. இப்போது புத்தகவடிவில் வெளிவருகிறது. ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத் தில் வெளிவரும் ஏழாவது சதகமும் விரைவில் புத்தகமாக வெளியிடப்பெறும். ஸுதர்சனத்தில் எட்டாவது சதகமும், கீதாசார்யனில் ஒன்பதாவது சதகமும் அடுத்தபடி தொடங் கும். அன்பர்கள் மத விஷயமாகத் தங்களுக்கு எழும் ஐயங்களைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுதியனுப்பினுல், ஆதாரத்தோடு அவற்றுக்கு பதில் இறுக்கப்பெறும்.

| | | | விலை | தபால் |
|---|---|---|---|---|
| 1. | ஸுதர்சனர் பதில் | முதல் சதகம் | 1-50 | 0-40 |
| 2. | ,, | 2-வது சதகம் | 3-00 | 0-60 |
| 3. | ,, | 3-வது சதகம் | 4-50 | 0-75 |
| 4. | ,, | 4-வது சதகம் | 4-50 | 0-75 |
| 5. | ,, | 5-வது சதகம் | 5-00 | 0-75 |
| 6. | ,, | 6-வது சதகம் | 2-00 | 0-40 |

---

கிடைக்குமிடம்: — ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், அட்வகேட்.
ஆசிரியர், 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

# அப்பயதீக்ஷிதர்பற்றி

# அண்ணா ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகள்

## ' ஞானபூமி ' மணியனுக்கு அறிவுரைகள்

[ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
'ஸுதர்சனம்' ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி 17.]

1. 'ஞானபூமி' தொடங்கும்போது ஸுதர்சனத்தை மாற்றுப் பிரதியாக (Exchange Copy) அனுப்பவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதன்படியே நாம் இன்றளவும் மாதந்தோறும் ஸுதர்சனத்தை அனுப்பி வருகிறோம். தொடக்கத்தில் ஒரு சில இதழ்கள் அனுப்பிவிட்டு, 'ஞானபூமி'யிலுள்ள விஷ்ணு வைஷ்ணவ நிந்தனைகளையும், தவறுகளையும் நாம் விமர்சிப்பதைக்கண்டு 'ஞானபூமி' அனுப்புவதை நிறுத்தி விட்டார். சில அன்பர்கள் ஞான பூமியின் இதழையும் அனுப்பி அதிலுள்ள விஷயங்கள்பற்றிக் கேள்வி கேட்டதற்கு மாத்திரம் ஸுதர்சனத்திலும், கீதாசாரியனிலும் பதில் அளித்து வந்தோம். நடக்கும் ஜூலை மாத 'ஞானபூமி'யில் கீர்த்திமூர்த்தியான காஞ்சீ மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் பேட்டி வெளிவந்திருக்கிறதென்றும், அதில் மணியன் " ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தின் பத்திராதிபர் கிருஷ்ணசாமி அய்யங்கார், மஹான் அப்பய்யதீட்சிதரைத் துரோகி என்பதுபோல் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார். அப்படி எழுதலாமா ?" என்று ஸ்வாமியைக் கேள்வி கேட்டிருப்பதாகவும், ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி "வரதராஜப்பெருமாளை அப்பய்யதீட்சிதர் நூறு சுலோகங்களைப் பாடி வழிபட்டிருக்கிறார். வேதாந்த தேசிகன் பாடியவை ஐம்பது. அப்படி வேறுபாடு கருதாமல் பாடி வழிபட்ட மகானை நிந்தித்து எழுதுவது முறையல்ல" என்று பதிலளித்திருப்பதாகவும், இது உண்மையா? என்றும் பல அன்பர்கள் கடிதம் எழுதியிருந்தார்கள். நம்மைப்பற்றி விமர்சித்திருக்கும் இவ்விதழைக்கூட நமக்கு அனுப்பும் நேர்மை மணியனுக்கு இல்லை. ஜூலை 16, 17 தேதிகளில் சென்னை சென்றிருந்தபோது அந்த 'ஞானபூமி' இதழை ஓர் அன்பரிடமிருந்து பெற்றோம். நமது நண்பர் 'கீதாசாரியன்' ஆசிரியர் ஸ்ரீ. வேங்கட கிருஷ்ணனிடமிருந்த ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி பேட்டியின் ஒலிப்பதிவையும் கேட்டோம். அதில்—மணியன் கேள்விகேட்கும்போது தாம் அப்பய தீட்சிதரை "துரோகி" என்று குறிப்பிட்டிருக்கும் இடத்தைக் காட்ட வில்லை. என்ன காரணத்தைக்கொண்டு அப்படிக் கூறியிருக்கிறோம் என்பதையும் கூறவில்லை; " அப்படி எழுதியிருக்கிறாரா " என்று ஸ்வாமி கேட்கிறார்; வரதராஜனை தீட்சிதர் பாடியிருப்பதை ப்ரஸ் தாபிக்கிறார். மேலே பதிலளிக்கத் தயங்குகிறார்; " எனக்கு 93 வய தாயிற்று " என்று கூறுகிறார்; " அப்படி எழுதியிருந்தால் தவறு என்று சொல்லுங்கோ " என்று மணியன் முதலானவர்கள் வற்புறுத்து கிறார்கள். ஸ்வாமி மிக்க தயக்கத்துடன் ஈனஸ்வரத்தில் சொல்லும்

பதிலில் "அப்படி எழுதியிருந்தால்" என்னும் இவ்வளவே ஒலிப் பதிவில் கேட்கிறது. "அப்படி வேறுபாடு கருதாமல் பாடி வழிபட்ட மகானை நிந்தித்து எழுதுவது முறையல்ல" என்னும் வாக்கியம் மணியனால் கற்பனை செய்து சேர்க்கப்பட்டிருக்கிறது. இவற்றிலிருந்து மிக முதிர்ந்த வயஸ்ஸில் பரமபதிப்பதற்குச் சில நாட்களுக்கு முன் புத்தி சக்தி குறைந்திருந்த நேரத்தில், விமர்சிக்கப்படும் நாம் இல்லாமலிருக்கையில், நமது எழுத்தையும் காட்டாமல், ஸ்வாமியிடமிருந்து வற்புறுத்தி வாங்கிய அபிப்ராயத்துக்கு எந்த மதிப்பும் கிடையாது என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். ஸ்வாமி நல்ல புத்தி சக்தியுடன் இருக்கையில் அப்பயதீட்சிதர் பற்றி எழுதியுள்ள விஷயங்களை மூன்றாவது பாராவில் அளிக்கிறோம். அவற்றைக் காண்பார்க்கு அடுத்த பாராவில் அப்பயதீட்சிதரைப் பற்றி நாம் எடுத்துக்காட்டியிருக்கும் பிரக்ருத சர்ச்சைக்குரிய நமது வாக்யங்கள் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளைப் பின்பற்றியவையே என்பதும், மணியன் ஸ்வாமியின் மறதியைப் பயன்படுத்திக்கொண்டு அவரைத் தாமே மறுத்துக்கொள்ளும்படி செய்துவிட்டார் என்பதும் புலனாகும்.

2. 1983 மார்ச் 'ஞானபூமி'யில் 'கௌதம நீலாம்பரன்' என்னும் புனைபெயர்கொண்ட 'கைலாசநாதன்' என்னும் சைவர் "அருள் உள்ளங்கொண்ட அப்பய்ய தீட்சிதர்" என்ற கட்டுரை எழுதியிருந்தார். 'ரங்கராஜாத்₄வரி' என்னும் அப்பயதீட்சிதருடைய தந்தையின் பெயரை 'ரங்கராஜாத்வாரி' என்று இரண்டிடங்களில் எழுதியிருப்பதிலிருந்து இவர் வடமொழி அறியாதவரென விளங்குகிறது. 'அத்₄வர' சப்தம் யாகத்தைக் குறிக்கும். 'அத்₄வரி' சப்தம் யாகஞ்செய்த தீக்ஷிதரைக்குறிக்கும். ரங்கராஜாத்வாரி என்பது தவறான சொல். இக்கைலாசநாதன் கோடிகன்னிகாதாநம் தாதாசாரியர் என்னும் ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யபுருஷரைக் குறிப்பிட்டு "இயல்பான காழ்ப் புணர்வுடன் தீர்த்தத்தில் விஷம் கலந்து தீட்சிதருக்குக் கொடுக்கச் செய்தார் இவர் ............... தீட்சிதரின்மீது தீய ஆவிகளை ஏவுவது, தியானம் செய்யும் இடத்தில் அசுத்தம் செய்வதுபோன்று எத்தனையோ தீமைகளைச் செய்தார். அவரைக் கொல்லவும் முயன்றார்" என்று அவர்மீது வசவுமாரி பொழிந்திருக்கிறார். தீட்சிதர் திருவரங்கம் சென்றிருந்தபோது வைணவர்கள் அவரைக் கோவிலுக்குள்ளே அனுமதிக்க மறுத்தார்கள் - என்று அபாண்டமாக ஸ்ரீரங்கம் ஸ்ரீவைஷ்ணவர்கள்மீது பழி சுமத்தியிருக்கிறார். ஓர் ஆதாரமும் காட்டாமல் அப்பயதீக்ஷிதரைப்பற்றி மற்றும் பல பொய்க்கதைகளை எழுதியிருக்கிறார். இவற்றைக் கண்டு மனம்நொந்த நமது நண்பரான R. நந்தகுமார் என்னும் இளைஞர் 'இவ்விஷயங்கள் உண்மையானவையா?' என்று நம்மைக் கேட்டிருந்தார். 'கீதாசாரியன்' 1983 ஏப்ரல் மாத இதழில் வெளிவந்த ஸுதர்சனர் பதிலில் 98-வது கேள்வியாக இதை இட்டு நாம் பின்வருமாறு பதில் எழுதியிருந்தோம்.

"கௌதம நீலாம்பரன்" கற்பனைக்கதைகளை எழுதுபவர். தமது கற்பனை வளத்தைக்கொண்டு பௌராணிக ரீதியில் இக்கட்டுரையில் பொய்க்கதைகளை எழுதியுள்ளார். அப்பய்யதீக்ஷிதரின் நூல்களைக் கொண்டு பார்க்கும்போது ஓரிடத்தில் சிவபரத்வவாதமும், மற்றோரிடத்தில் த்ரிமூர்த்திஸாம்யவாதமும், வேறோரிடத்தில் த்ரிமூர்த்திஐக்ய வாதமும், பிறிதோரிடத்தில் மும்மூர்த்திகளைக் காட்டிலும் மேலான தான்றோ பரம்பொருள் என்னும் உத்தீர்ணவாதமும் செய்வதைக் காண்கிறோம். இதிலிருந்து இவர் நிலையான மதக்கொள்கை இல்லாதவர், இக்கால அரசியல் வாதிகளைப் போன்றவர்' என விளங்குகிறது. சிவபரத்வவாதம், ஸாம்யவாதம், ஐக்யவாதம், உத்தீர்ணவாதம், சக்திவாதம் முதலான ஒன்றுக்கொன்று முரண்பட்ட வாதங்களை மனம்போனபடி செய்பவர்களாய், பரமவைஷ்ணவராயிருந்த ஆதிசங்கரருக்கு துரோகிகளாய் இக்கால அத்வைதிகள் மாறுவதற்கு அப்பய்யதீக்ஷிதரே வழி வகுத்தவராகையால், அவரைப் பற்றி 'கௌதம நீலாம்பரன்' போன்றவர்கள் கதைகள் எழுதிப் புகழ்வதில் வியப்பில்லை.

இந்த பதிலில் நாம் கௌதமநீலாம்பரனைப்போலே கற்பனைக் கதைகளை எழுதவில்லை. அப்பயதீட்சிதர் தம்முடைய சிவதத்வ விவேகம், சிவார்க்கமணிதீபிகை முதலான வடமொழி நூல்களில் முன்னுக்குப்பின் முரணான பல வாதங்களைச்செய்து, உபநிஷத், ப்ரஹ்மஸூத்ர கீதா ஸஹஸ்ரநாம பாஷ்யங்களில் பரம வைஷ்ணவராகக் காட்சியளிக்கும் ஆதிசங்கரருக்குத் தாம் துரோகம் செய்த தோடல்லாமல், இக்கால அத்வைதிகளையும் அதே வாதங்களைச் செய்து ஆதிசங்கர த்ரோஹிகளாக மாறுவதற்கு வழிவகுத்ததையே குறிப்பிட்டிருக்கிறோம். அப்பயதீட்சிதருடைய வடமொழி நூல்களைப் படித்துப் புரிந்துகொள்வதற்கு இயலாத மணியனும் கௌதம நீலாம்பரனும்—நாம் எழுதியிருப்பதை மறுக்கமுடியாததால் இடத்தைக் குறிப்பிடாமல் காஞ்சீ ஸ்வாமியிடம் வற்புறுத்தி ஓர் அபிப்ராயம் வாங்குவதன்மூலம் வெற்றிமுரசு கொட்டிவிடலாம் என்று மனப்பால் குடித்தே இவ்விழிசெயலைத் தொடங்கியுள்ளனர் என விளங்குகிறது. ஆதிசங்கரர் தமது பாஷ்யங்களில் நாராயணன் ஒருவனையே சிவன் முதலான எல்லா தேவதைகளையும் படைத்து அளித்து அழிக்கும் ஸகுணப்ரஹ்மமாக முழங்கியிருக்கிறார் என்பதை எதிரிட்டவர்களும் வாய்திறக்கவொண்ணாதபடி நாம் "சங்கரரும் வைணவமும்" என்னும் நூலில் நிலைநாட்டியிருக்கிறோம். இந்த நினைவு மலரில் அச்சிடப்பட்டிருக்கும் "அண்ணா ஸ்வாமியின் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவமத ஸ்தாபநம்" என்னும் கட்டுரையில் ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியும் இவ்விஷயத்தை நிலைநாட்டியிருக்கிறார் என்று காட்டியிருக்கிறோம். அப்பயதீட்சிதர் இவற்றுக்கு முரணாகப் பல வாதங்கள்செய்து ஆதிசங்கர துரோகி ஆகிவிட்டார் என்பதை—

மணியனும், கைலாசநாதனும் வடமொழி வல்லுநர் துணைகொண்டு அப்பயதீட்சிதரின் சிவதத்வவிவேகம், சிவார்க்கமணிதீபிகை முதலான நூல்களின் பொருளை அறிந்தால் உணர்வார்கள். ஆனால் அத்தகைய நேர்மையை இவர்களிடம் நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. அதனால், இவர்களுடைய செயலைத் தவிடுபொடியாக்கும்படியாக ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமி புத்திசக்திகள் மிகுந்திருந்த காலத்தில் நம்மைக்காட்டிலும் கடுமையாக அப்பயதீட்சிதரைப் பல இடங்களில் கண்டித்துள்ளார் என்பதை அடுத்த பாராவில் காட்டுவோம்.

3. (1) 1958 ஜூன், ஜூலை மாதத்துக்கான ஸ்ரீராமாநுஜன் 114-115ல்—காஞ்சீ காமகோடிப் பெரிய சங்கராசார்யர் "விஷ்ணுவுக்குத் தமோகுணமுண்டு" என்று கூறியதற்குக் கண்டனமாக ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமி 'ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம்' என்னும் நூலை எழுதி வெளியிட்டார். அதில் 14-ம் பக்கத்தில்—

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் விசேஷித்து ஆதரிக்கிற நாராயணனையே நாமும் ஆதரிப்பதா? என்றொரு அபிப்ராயமுண்டாகி நாராயண த்வேஷமோ நாராயண தூஷணமோ அத்வைதிகளுக்கு இடைக்காலத்தில் தான் ஏற்பட்டது. அப்பயதீக்ஷிதோபஜ்ஞமிது—என்று பெரியோர் சொல்லக் கேள்வி; அவர் "நமோ ஹரிகேசாய" என்கிற வேத வாக்கியத்திற்குப் பொருள் சொல்லுகையில் "ஹரிஸ்ச கஸ்ச ஹரிகௌ; தயோரீச: ஹரிகேச:" [ஹரிக்கும் 'க.' எனப்படும் பிரமனுக்கும் ஈசுவகிற உருத்திரன் ஹரிகேசன்] என்று வ்யுத்பத்தி காட்டி ஹரிக்கும் பிரமனுக்கும் தலைவன் ருத்ரன் என்று சிஷ்யர்களுக்கு போதித்தாராம். அதைக் கேட்டுக் கொண்டிருந்த மஹாவிவேகினியான அவருடைய மாதா "பையா! அதோ வேத பாடசாலையில் பதபாடம ஸந்தை நடந்துகொண்டிருக்கிறது; அங்குசென்று கேட்டுவா" என்று சொன்னாளாம். தீக்ஷிதர் ஸர்வதோமுகமான ஞானம படைத்திருந்தும் வேதாத்யயநம் செய்திராமையாலே எழுந்து வேதபாடசாலையிற் சென்று கேட்டாராம்; அங்கு "ஹரிகேசாயேதி ஹரி—கேசாய" என்று வேஷ்டநபாடம் இவருடைய காதில் விழுந்தது. இவர்தாம் போதித்த பொருள் வேத புருஷனுக்கு அபிமதமாயிருந்தால் "ஹரிகேசாயேதி ஹரிக—ஈசாய" என்று வேஷ்டநபாடம் வந்திருக்கவேண்டும். அப்படி வராமையினாலும் செம்பட்டை மயிரையுடையவனென்னும் பொருளைக்காட்டுமதான பாடமே வந்திருந்தபடியாலும் தாம் கொண்ட பொருள் அஸங்கதமென்றறிந்து அநுதபித்து மாதாவிடம் சென்று நமஸ்கரித்து 'அம்மா! தெளிவு பெற்றேன்; எனக்கு விஷ்ணுத்வேஷம் அதிகரித்து வருகிறதே; இதற்கு என்ன காரணம்?' என்று கேட்க, அதற்கு அவள் ஏதோ ரஹஸ்யம் தெரிவித்ததாகச் சொல்லப்படுகிறது. அது வேதாந்த கௌஸ்துபத்தில் ஸூசிதமாகவுள்ளது. பிறகு அவர் விஷ்ணுத்வே

ஷத்வைத விலக்கிக்கொள்ளமுயன்றாராம். அது தோன்றவே அவர் நய மயூகமாலிகையென்றொரு ப்ரஹ்ம ஸூத்திர வியாக்கியானமெழுதினார். அதில் "லக்ஷ்மணார்ய ஹ்ருதயாநுஸாரிணீ ரச்யதே நய மயூகமாலிகா" [ஸ்ரீராமாநுஜாசார்யரின் திருவுள்ளத்தையொட்டி நயமயூகமாலிகை இயற்றப்படுகிறது.] என்கிற ப்ரதிஜ்ஞையுள்ளது.

என்று ஸ்வாமி எழுதியுள்ளார். இதில் அப்பயதீக்ஷிதராலேயே தற்கால அத்வைதிகளுக்கு நாராயண த்வேஷதூஷணங்கள் ஏற்பட்டன என்றும், அப்பயதீக்ஷிதர் வேதாத்யயனம் செய்யாதவர் என்றும், விஷ்ணுத்வேஷத்தாலே வேதத்துக்கு அவப்பொருள் கூறினார் என்றும், தமக்கு விஷ்ணுத்வேஷம் வளர்வதற்குக் காரணத்தைத் தாயாரிடமிருந்து தெளிவு பெற்றார் என்றும், விஷ்ணுத்வேஷம் நீங்கினபின்பே 'நயமயூக மாலிகா' எழுதினார் என்றும் எழுதியிருப்பதைக் கண்ணுடையார் காணலாம். இதைக்கொண்டே விஷ்ணுத்வேஷம் நீங்கியபின்பே வரதராஜஸ்தவமும் செய்தார் என்றும் மணியன் உணரலாம்.

(2) 1974 சித்திரை மாதத்துக்கான ஸ்ரீராமாநுஜன் 309-310ல் வெளிவந்துள்ள அபூர்வார்த்தரத்னநிதியில் 95ம் பக்கத்தில் யாதவாப்யுதயவ்யாக்யாதாவான அப்பயதீக்ஷிதருடைய அரஸிகத்தன்மையை ஆங்காங்கு எடுத்துக்காட்டி யாதவாப்யுதய உபந்யாஸத்தைத் தாம் செய்ததாக ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி கூறியுள்ளார். 96ம் பக்கத்தில் 130வது பாராவின் இறுதியில் "தீக்ஷிதர் இச்சுவைப் பொருளை உணரும் குடியிலே பிறந்திலராதலால் இப்பரமார்த்தம் அவருக்குப் புரியாதது வியப்பன்று கிடீர்!" என்று எழுதியுள்ளார். 97வது பக்கத்தில் 131வது பாராவில் தீக்ஷிதர் அவப்பொருள் உரைத்திருப்பதைக் காட்டுகிறார். 98ம் பக்கத்தில் 133வது பாராவின் இறுதியில் "வேத வைதேசிகரென்று பிரஸித்தரான தீக்ஷிதருக்கும் இது நில மன்றே" என்று முடிவு கட்டுகிறார். 99, 100ம் பக்கங்களில் 133வது பாராவில் "ஐந்துவிதமான குதர்க்க வாதங்களைச் செய்யும் தீக்ஷிதரும் அவரைச் சேர்ந்தவர்களும் ஐந்துதலைக் காளியநாகத்தைப் போன்றவர்கள்" என்று எழுதியிருக்கிறார். இவ்வண்ணமாக நம்மைக் காட்டிலும் மிகக்கடுமையாக தீக்ஷிதரைக் கண்டித்திருக்கும் ஸ்ரீகாஞ்சீ அண்ணா ஸ்வாமியிடம் நம்மைப்பற்றி முறையிட்ட மணியன் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியைப் பற்றி யாரிடம் முறையிடுவார் என்று உலகுக்குத் தெரியவேணும்.

4. இந்துக்களிடையே ஒற்றுமை உண்டாகவேண்டுமென்றால் அதற்கு அத்வைதிகளும் ஒத்துழைக்கவேண்டும். "நாங்கள் தாதாசார்யர் போன்ற வைஷ்ணவர்களை வைதுகொண்டும் வைஷ்ணவ நூல்களைத் திரித்துரைத்தும் வைஷ்ணவத்தை அழிக்க முயன்று கொண்டுதான் இருப்போம். வைஷ்ணவர்களான நீங்கள் இவைகளை

யெல்லாம் ஆநந்தமாக ஏற்றுக்கொண்டு அப்பயதீட்சிதர் போன்றவர்களைப் பற்றி எதுவும் எழுதாமலிருக்கவேண்டும். அப்போதுதான் இந்துக்களிடையே ஒற்றுமையுண்டாகும். நாத்திகரோடு நாம் போராடலாம்'' என்னும் மணியனுடைய வாதத்தை ஒப்புக்கொள்ளுமளவுக்கு வைஷ்ணவர்கள் மதிகெட்டு மானங்கெட்டுப் போகவில்லை.

5. ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியின் பேட்டியில் நம்மைப் பற்றி ஓர் வாக்யத்தைப் புதிதாகக் கற்பித்து எழுதியதோடல்லாமல், ஸ்வாமி கூறின சில முக்கிய விஷயங்களை மறைத்துமிருக்கிறார் மணியன். ''சைவர் வைணவர் மாத்வர் போன்ற பிரிவினைகள் அவசியமா? ஏன் எல்லோரும் ஒன்றாகச் சேரக்கூடாது?'' என்ற கேள்விக்கு ''அதில் என்ன லாபம்? எல்லாம் கலந்த ஒன்று அவசியம் தானா?'' என்று பதில் கேள்வி கேட்டிருக்கிறார் ஸ்வாமி. ''பொதுவாக பலம் அதிகரிக்கும் என்பதுதான்'' என்று மணியன் கூறியவுடன் ''செய்யலாம்'' என்று ஸ்வாமி சொல்லியிருக்கிறார். இதை வெளியிட்ட மணியன் எந்த அடிப்படையில் ஒன்றாகச் சேரலாம் என்று இந்த பேட்டியிலேயே வழிகாட்டியிருப்பதை விட்டுவிட்டார். அதாவது— ''அக்₃நிரவமோ தே₃வதாநாம் விஷ்ணு: பரம:'' [தைத்திரீயஸம்ஹிதை 5-5] [தேவதைகளுக்குள் கடைகெட்டவன் அக்னி; தனக்கு மேலில்லாதபடி மிக உயர்ந்தவன் விஷ்ணு] என்னும் வேதவாக்யத்தை விரிவாக விளக்கி இதை வைதிகர்களாகிற நாமனைவரும் ஏற்றுக் கொண்டால் இவ்வடிப்படையில் நாமனைவரும் ஒன்றாகச் சேரலாம் என்று உணர்த்தியிருக்கிறார் ஸ்வாமி. வைஷ்ணவர்கள் அனைவரும் தங்கள் மதத்தைக் கைவிட்டு 'எல்லா தெய்வங்களும் ஒன்று' என்னும் போலி அத்வைதிகளாக மாறுவதே ஒற்றுமைக்கு வழி என்னும் கெட்ட எண்ணமுடையவராகையாலே, பேட்டியில் இந்த முக்கியமான பகுதியை மறைத்துவிட்டார் மணியன். மேலும்; 'காஞ்சீ காமகோடி பெரிய சங்கராசார்யர் விஷ்ணுவைப் பல சமயங்களில் இழித்து உரைத்திருக்கிறார்' என்றும் '' 'நாராயணஸ்மரணம்' என்று கையெழுத்துப் போட்டுக்கொண்டு இப்படி விஷ்ணுவை இழித்துரைக்கிறீர்களே'' என்று தாம் கேட்டதாகவும், அதற்குக் காமகோடி பீடாதிபதி எந்த பதிலும் கூறாமல் சிரித்துக்கொண்டிருந்துவிட்டதாகவும் கூறியிருக்கிறார் ஸ்வாமி. இப்படிக் கூறியதன்மூலம் அத்வைதிகள் விஷ்ணுவை இழித்துரைப்பதை நிறுத்தினால்தான் ஒற்றுமையுண்டாகும் என்று உணர்த்தியிருக்கிறார் ஸ்வாமி. விஷ்ணுவையும் வைஷ்ணவர்களையும் இழித்துரைப்பதையே இயல்பாகக்கொண்ட காமகோடிபீடாதிபதிக்கும், அவருடைய சிஷ்யர்களான மணியன் போன்றவர்களுக்கும் இந்த அறிவுரை மிகக் கசப்பானதாகையால் பேட்டியில் முக்கியமான பகுதியான இதையும் மறைத்துவிட்டார் மணியன். இவர்களிடம் வைஷ்ணவர்கள் நியாயத்தை எப்படி எதிர்பார்க்கமுடியும்?

6. பேட்டியில் வரதராஜஸ்தவத்தைப்பற்றிப் பேச்சுவரும்போது, ஸ்வாமி அதிலிருந்து ஒரே ஒரு சுலோகத்தை மேற்கோள் காட்டி விளக்கியிருக்கும் பகுதியையும் மணியன் அச்சிட விட்டிருக்கிறார். அந்த ஶ்லோகத்தில் "வரந்தரும் பெருமானான வரத₃ராஜனுக்கு வரத₃முத்₃ரை ஏன் இல்லை?" என்னும் கேள்வியை எழுப்பிக்கொண்டு, தீக்ஷிதர் ஓர் பாமரப் பழமொழியை த்ருஷ்டாந்தமாகக் கூறியிருக்கிறார். அதாவது—"விஶ்வப்ரஸித்₃த₄தர விப்ரகுல ப்ரஸூதே: யஜ்ஞோபவீத வஹநம் ஹி ந கூ₃ல்வபேக்ஷ்யம்" என்பது. இதன் பொருள்:— "நாடறிந்த பார்ப்பானுக்குப் பூணூல் தேவையில்லையன்றோ; அது போல் 'வரத₃ராஜன்' [வரந்தருகிறவர்களுக்குத் தலைவன்] என்று பெயர்பெற்று, வரந்தரும் பெருமாள் என நாடறிந்த பெருமாளுக்கு வரத₃முத்₃ரை தேவையில்லையே" என்பது. இந்தப் பாமரப் பழமொழியில் சொல்லியிருக்கும் பொருளை வைதி₃கர் எவரும் ஏற்க மாட்டார்கள். பூணூல் இல்லையென்றால் பிராம்மண்யமே சித்திக்காதன்றோ. இதை திருஷ்டாந்தமாக எடுத்து இப்பழமொழியை ஆதரித்திருக்கும் தீ₃க்ஷிதர் மட்டரகமான அவைதிக மக்களோடு தொடர்பு கொண்டு அவர்கள் வழங்கும் (வைதிகர் ஏற்கத்தகாத) பழமொழியை ஆதரிக்கும் தரமுடையவர் என்று வைதிகர்களை உய்த்துணரவைத்திருக்கிறார் ஸ்வாமி. ஸ்வாமி பொடி வைத்துப் பேசுபவர் என்பதும், ஹாஸ்யவுணர்ச்சி மிக்கவர் என்பதும் உலகறிந்த விஷயம். இதை அறிந்தோ, அறியாமலோ பேட்டியிலுள்ள இந்த விஷயத்தையும் எடுத்துவிட்டார் மணியன். மற்றும் ஸ்வாமி மேற்கோள் காட்டியிருக்கும் பல ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களைத் தப்பும் தவறுமாக அச்சிட்டிருக்கிறார் மணியன். இதிலிருந்து மணியன் குழுவினரில் எவருக்கும் வடமொழி தெரியாது என்றும், ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் பரிசயமில்லை என்றும் விளங்குகிறது. ஞானபூமியில் அச்சிடப்படும் வடமொழி வாக்யங்களில் பல பிழைகள் உள்ளன என்பதை நாம் ஏற்கனவே ஸுதர்சனர் பதிலில் எடுத்துக்காட்டியிருக்கிறோம். வைதிக மதப் பத்திரிகையொன்றை லக்ஷக்கணக்கில் செலவழித்து அச்சிடும் மணியன் ஓர் வடமொழிப் பண்டிதரைக்கூட வேலைக்கு அமர்த்திக் கொள்ளாதது மிகவும் வருந்தத்தக்கது.

7. ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமியின் பேட்டியில் பல விஷயங்கள் 'ஞானபூமி'யில் மாற்றி எழுதப்பட்டுள்ளன என்று சமீபத்தில் வடநாட்டு யாத்திரையிலிருந்து ஸ்ரீரங்கம் திரும்பிவந்த ஜீயர் ஸ்வாமி அடியேனிடம் அருளினார். ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமியின் பேட்டியில் பல விஷயங்கள் 'ஞானபூமி'யில் திரித்து வெளியிடப்பட்டன என்பதை ஸ்ரீமதாண்டவன் ஆச்ரமப் பத்திரிகையான ஸ்ரீரங்கநாதபாதுகாவே வெளியிட்டது. கௌடிய மதத்தலைவரான ஸ்ரீபக்திப்ரஜ்ஞானயதியின் பேட்டி அடியோடு மாற்றி வெளியிடப்பட்டது என்று அவர்களுடைய கௌடிய பத்திரிகையே முழங்கிற்று. இப்போது அண்ணா ஸ்வாமியின்

பேட்டியில் மிகவும் முக்கியமான பகுதிகள் விடப்பட்டிருப்பதையும் ஸுதர்சனர் பதிலைப் பலமுறை பாராட்டியிருக்கும் அண்ணா ஸ்வாமியையும், நம்மையும் சிண்டுமுடிந்துவிடும் வேலை நடந்திருப்பதையும் காண்கிறோம். மணியன் காட்டும் ஒற்றுமைவழி இதுவே போலும் !

## 8. மணியனுக்கு அறிவுரைகள்

திரு. மணியன் ஆஸ்திகர்களான நாம் அனைவரும் ஒற்றுமையாயிருக்கவேண்டும் என்பதில் மிக்க ஆர்வமுடையவராயிருக்கிறார் என்று கீதாசாரியன் ஆசிரியர் ஸ்ரீ. வேங்கடகிருஷ்ணன் கூறுகிறார். அதற்காகவே நாம் மணியனோடு சந்தித்துப் பேசவுமிசைந்தோம். 21—7—83 அன்று மணியனோடு பேட்டி நடைபெற ஸ்ரீவேங்கடகிருஷ்ணன் முயற்சி எடுத்துக்கொண்டார். ஆனால் மணியன் அன்று தனக்கு ஒழியவில்லை என்றும், திருச்சிக்கே வந்து நம்மை பேட்டி காண்பதாகவும் தொலைபேசி மூலம் பேசியபோது கூறினார். பேட்டி கண்டாலும் காணவிட்டாலும் ஒற்றுமைக்கு நேர்மையான வழிகளைக் கீழே குறிப்பிடுகிறோம்.

(1) சைவம், வைஷ்ணவம், அத்வைதம் இம்மூன்று மதங்களும் சேர்ந்ததே இந்துமதம்; முரண்பட்ட அடிப்படைக் கொள்கைகளையுடைய இவற்றை ஒருநாளும் ஒன்றாக்கமுடியாது என்பதை இரு தரப்பினரும் இசையவேண்டும்.

(2) இந்த மூன்று மதத்தினரும் அவரவர் மதத்தை உறுதியாகப் பின்பற்றிக்கொண்டு "ஞானபூமி" "இதயம்" போன்ற பொதுஜனப் பத்திரிகைகளிலும், பொதுமேடைகளிலும் ஒருவரை ஒருவர் தாக்காமலும், இழித்தும் திரித்தும் கூறாமலும், பரஸ்பர சகிப்புத்தன்மையுடன் வாழவேண்டும்.

(3) அந்தந்த மதத்துக்கேயுரிய பத்திரிகைகளிலும் மேடைகளிலும் மற்ற மதங்களைக் காட்டிலும் தங்கள் மதமே சிறந்தது என்று பிரசாரம் செய்யலாம்.

(4) 'ஞானபூமி' 'இதயம்' போன்ற பொதுஜனப் பத்திரிகைகளில் சைவம், வைஷ்ணவம் முதலான மதங்களைப்பற்றி அந்தந்த மதத்தில் வல்லுநரைக்கொண்டோ, அல்லது அவர்களைக் கலந்துகொண்டோ கட்டுரைகள் வெளியிடவேண்டும்.

(5) இந்த நிபந்தனைகளுக்கு முரணாக ஞானபூமி, இதயம், கல்கி, விகடன், துக்ளக், கலைமகள் முதலான பத்திரிகைகள் சைவத்தையோ வைஷ்ணவத்தையோ இழித்தோ, திரித்தோ, தாக்கியோ எழுதினால் முறையே சைவ வைஷ்ணவ பத்திரிகைகளுக்கு அவற்றைக் கண்டிக்க உரிமையுண்டு.

இந்த நிபந்தனைகளை மணியன் கைக்கொண்டு 'ஞானபூமி' முதலான தன் பத்திரிகைகளை நடத்துவார் என நம்புகிறோம்.

---